# அம்மா –என் ஆனந்த உறவு

---





நீயே எமக்குத் தாயானாய், நினைவறிந்த நாள்முதல்
தந்தையில்லாப் பிள்ளைகள் எமக்குத் தந்தையுமானாய்
எம் நெஞ்சை மகிழ்விக்கும் பேரின்ப உறவானாய்
மாதா பிதா கடந்த தெய்வமும், குருவுமானாய்

வளரும் நிலவெனுக்கு வானாய் நின்றாய்,
வயல்வெளிப் பூ எனக்கு வான் மழையாய் வந்தாய்,
மலரும் கனவுகளுக்கு வண்ணம் கொடுத்தே- நிலையான
கல்விச் செல்வத்தை கலைமகளாய் எமக்களித்தாய்

உழைத்து களைத்து உடல் தளர்ந்தபோது
மூப்பும் பிணியும் வாட்டியபோது-என் மடியில்
உன்னைத் தாலாட்ட நீயே எனக்கு மகளாகி
தாய்மையின் வரம் தந்த தெய்வமானாய்

உனக்காய்ப் பணிசெய்ய -என்னையும்
சிறுதொண்டனாய் உருமாற்றி உய்வித்தாய்
சிறு தொண்டனாய் செய்த பணியெல்லாம்-இறைவா
உனக்கென்று நான் செய்ய, தாயே நீ ஈந்த வரம் பெரிது
என் ஏழ் பிறப்பும் உன்னால் முக்திபெற
எனக்கீந்த அருள் பெரிது

தாயே, இறை ஈந்த அருள்வரமே, அம்மையப்பனாய்
என்னைக் காத்த தெய்வமே, தெய்வத்தை நானறிய அறிய
அதுவும் நீயென்று அறிந்து அகமகிழ -தாயாய்
என் வாழ்வில் வந்த அவதாரம் நீயே அம்மா

வான் நிலவும், வண்ணத் தேன் மலர்களும்
வாழும் வரை, அன்னையே நானறிந்த தெய்வமே
என் உள்ளம் உன்னை ஒருபோதும் மறவாது.
இறைவனுக்கு நன்றி சொல்ல மறவாது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-08-2023

# அன்னையர் தினம்

---



அன்னையர் தினம் எதற்கு? நாளும், பொழுதும்
அவள் நினைவாக, வாழும் பொழுதும் அவள்
கனவாக, ஊனும், உறக்கமும் அவள் உறவாக,
என் வாழ்நாள் பொழுது

ஒரு நாள் போதாது அன்னையை நினைக்க
வாழ்நாளும் காணாது தாயின் பெருமையை உரைக்க
ஊனிலும், உதிரத்திலும் கலந்த உறவு
உயிர் மூச்சில் நின்றுலவும் அவள் நினைவு



மறக்க முடியாத உறவு, கலைக்கமுடியாத இன்பக் கனவு,
இதயத்தில் அழிக்க முடியாத ஆனந்தக்கோலம்-வாய் இனிக்க,
மனம் சுவைக்க, அம்மா என்ற வார்த்தையின் ஜாலம்

ஊனாலும். உதிரத்தாலும் என்னைப்
படைத்து, உணவூட்டி-நீர் பாய்ச்சி-
உதரத்தையே விளைநிலமாக்கி
உயிர் கொடுத்த தெய்வம் அன்னை

கருவறைக்குள் தொப்பிள் கயிற்றாள் தொட்டில் கட்டி,
உதிரத்தை உணவாக்கி, உதரத்தில் என்னைச்
சுமந்தவள் வாழ்வைத் தவமாக்கி, பிள்ளை
என்னை வரமாக்கிய தெய்வமகள்

ஒவ்வொரு பிரசவமும் மறுபிறப்பாக, தன் உயிரைத்
தவமாக்கி எம் உயிரை வரமாக்கிடும் தாய்மை-
உறக்கத்திலும் தூங்காத விழிகள், குழந்தையின்
சினுங்கலுக்கும் செவி கொடுக்கும் மேன்மை

சேலையால் தூளி கட்டித், தூங்கிட
களிப்போடு தாலாட்டுப்பாடும் பெண்மை,
மும்மகளுக்கும் கிட்டாத பெருமை,
அம்மா என்ற தாய்மை

உயிர் மெய் கலந்த தமிழ் வார்த்தை அம்மா
உயிர் மெய் கலந்த அன்பின் வடிவமும் அம்மா
வாழும் காலமெல்லாம் வரமாய் வந்த உறவு-
உயிர் போன பின்பும்-நெஞ்சில் உறங்காத கனவு

வானூறும் நிலவும், தேனூறும்
மலர்களும் சாட்சியாக, என் சித்தம்,
நினைப்பு செய்கை உள்ளவரை-தாயே
தெய்வமே என் நெஞ்சம் உன்னை மறவாது

நினைக்கையில் விழிகளில் நீர் துளிர்க்க,
நெஞ்சில் தேன் இனிக்க, அணைக்கையில் மெய் சிலிர்க்க,
அம்மா என அழைக்கையில் வாய் இனிக்க
அவள் சேலையிலும் மணக்கும் தாய்மை



இறை தந்த உறவு, இறைவனின் மறுவடிவு -அம்மா
அம்மா சொல்லல்ல-சொர்க வாசலின் மந்திரம்
அன்னைக்கு ஒரு தினமல்ல, என் வாழ்நாள்
எல்லாம் அவள் தினமே

அவள் நினைவே தவம், உறவோ தியானம்,
அம்மா என்ற சொல்லோ மந்திரம்
தாயே தெய்வம்
அன்னையின் காலடியிலே சொர்க்கம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29-08-2023*

# அன்று சிந்திய இரத்தம்

---



நினைவு வருவதும் போவதுமான நிலையில் நினைப்பதற்குத்
தாயைத் தவிர-வேறு நினைவில்லை, கதறி அழுதிட
அம்மா என்ற சொல்லைத் தவிர வேறு சொல்லில்லை
கடவுளும் நினைவிற்கு வரவில்லை



ஒவ்வோர் நாடியும், நரம்பும் வலியைச் சொல்லியழ
கொடூரமாய் வதைத்துச் சிதைத்தவர் களைத்திட
கண்ணீர் பூத்த விழிகளும், குருதி வடியும் உடலுமாய்-அனலில்
வீழ்ந்த பூமாலைபோல் அறைக்குள் கருகிடக் கிடந்த மகன்

வடிந்த குருதி காய்ந்து பார்வையை மறைத்திருக்க,
வடியும் குருதி தேங்கி அழுது தரையை நனைத்திருக்க
தமிழனாய்ப் பிறந்த பாவம் தண்டனையை அனுபவித்தது

“அம்மா” “அம்மா” என் வாய் முனகிட
தாகமோ நெஞ்சை வாட்டிட-அன்னையின் மடிதேடும்
இதயம் -விழி நீர் பூத்து அழுதது

இனியும் வதைக்க உடலில் வலுவில்லை-பிழைக்க வைக்க
விசேட அதிரடிப்படைக்கோ இரக்க மனமில்லை
போதையில் நின்றவர்கள் அறையை வெளியே தாழிட்டு
யன்னல் வழியே வீசி எறிந்த கைக்குண்டு



உருண்டு வந்த கைக்குண்டு ஒரு கணம் உடலைத் தழுவி
அழுதது, மறுகணம், அறை அதிர்ந்திட வெடித்துச் சிதறிட
அறையெங்கும் குருதிக்கோலம்-மனங்களிலோ
அணையாத நெருப்பாய் குரோதத்தின் கொடுங்கோலம்

நடுநிசி கடந்த நேரம், சிதைந்த உடலைக்
கூட்டி அள்ளி வாகனத்தில் ஏற்றி-அலைமோதும்
கடலோரம் எரியும் டயர்களால் சிதைமூட்டி
ஈமக்கிரியை முடித்த அதிரடிப்படை

எரியும் டயர்களில்- இனவாத யாகங்கள்,
தீக்குளித்து மாளும் தமிழர் தியாகங்கள்
குருதிக் கங்கையில்-ஆயுதவாதிகளின்- குளியல்கள்?
விடுதலைப் போராட்டத்தின் வெறியாட்டங்கள்

புத்த நிலை காணாத பேரினவாதம், பெருமான் புத்தரைக்
கற்சிலையாக்கி போதி நிழலில் அமரவைத்தார்
அரக்க மனங்கள் இடமில்லை என்றே இயேசு
பெருமானை சிலுவையில் தொங்க விட்டார்

கரும் புகையில் எழில் நிலவும் முகம் மறைத்தழ,
கூகையும், கோட்டானும் கேவிக் கரைய
எரியும் சிதையை அணைக்க எழுந்த அலைகளோ
கரைமோதி வீழ்ந்து தோற்று அழுதன

எங்கோ பெற்றவளின் மணிவயிறு பற்றி எரிய
இனம்புரியாத துயரம் நெஞ்சை கவ்வ-அம்மா
என்றே அடிவயிற்றைத் தொட்டு அழுத ஏழை
எங்கே என் மகன் இறைவனைக் கேட்ட விதவை



கல்வாரிச் சிலுவையில்-தன் மகனும்
அறைந்து கொல்லப் படுவதை அனுபூதியில்
அறிந்து துடித்த அன்புத் தாய்- மரியாளே



அதிகாலையில் ஆர்ப்பரித்து எழுந்த பேரலை
அஸ்தியை அள்ளி எடுத்தே கடலில் கரைத்திட
கதிரவனும் கண்கலங்கி விழி சிவந்து உதித்திட
வானம் அழுது, கண்ணீர் அஞ்சலி செலுத்தியது.!

தம்பியைக் கொன்றவனைக் கண்டும்
என் நெஞ்சில் கோபமில்லை
வன்முறை ஆளும் நெஞ்சங்களுக்கு
இன்னமும் விடியல் இல்லை

அன்னை, அக்கையைக் கண்டு இளகிய மனம்
ஏன் இழைத்தோம் பெரும் பிழை என்று
வருந்திய குணம்-எல்லாம் மாறும் உலகில்
மாறாதார் யாருண்டு-இறைவா

என் தம்பி கடத்திச் செல்லப்பட்டு கொல்லப்பட்டார்-8-1-1991

***சப்பே தத்தா பவங்க துதி தத்தா***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29-08-2023*

# அன்னையும் பிதாவுமாகி

---

அம்மா சுவையல்ல அன்புச் சுவை, அம்மா வாசமல்ல
அன்பின் நேசம், அம்மா சொல்லல்ல முத்தமிழின் இசை
அம்மா காற்றல்ல உயிர்ச்சுவாசம், அம்மா வண்ணமல்ல
அன்பின் வானவில், அம்மா உணர்வல்ல விழிப்புணர்வு
அம்மா கதையல்ல அன்புக் காவியம்





அன்னை மடிதான், நோய்க்கும் கவலைக்கு
சஞ்சீவினி ஔடதம், இறைவனும் மகிழ்ந்தே-அவள்
திருவடியில் வைத்தான் சொர்க்கம்.

உதரத்தில் சுமந்தாள் மாதங்கள் பத்து
கைம்பெண்ணானபின்-உள்ளத்திலும்
உயிரிலும் சுமந்தால் வாழ்நாள் முழுதும்

மெய் தளர்ந்த காலத்தில் நான் சுமக்கத்
தாயோ எனக்கு பூச்சுமை, நான் சுவைக்க
அம்மையோ, முக்கனியும் தேனும் கலந்த
அமுதின் சுவை.



மண்ணாய் மாறித் தன்னுள் என்னை விதைத்தவளோ
என் தாயகம், விண்ணாய் நின்று காத்தவளோ என் வானகம்-
காற்றாய் மாறி என்னுள் உலாவியவளோ தென்றல்
நீராய் மாறி நித்தம் செழிக்க வைத்தவளோ- பூம்புனல்

திரியாய் மாறி சுடராய் எரிந்தவளோ தியாக தீபம்
ஐம்பெரும் ஆற்றலுமாகி அன்பால் நிறைந்தவளோ
தாய்மையின் திருவுருவம்.

அம்மா குழந்தைகளுக்கு அன்பின் தாரகமந்திரம்
அறிவை புகட்டுவதில் அன்னையோ நடமாடும் நூலகம்.
அன்னையும். பிதாவுமாகி நின்றவளோ தெய்வத்தின் அவதாரம்
என் வாழ்வுக்கு இன்றும் அவள்தான் ஆதாரம்.

அன்பினால் இன்புற்று என்னை ஈன்றெடுத்தாள்-அரும் பொக்கிஷமாய்
என்னைக் காக்க தன்னையே மெழுகாய் எரித்தாள், வறுமையும்,
பசியும், பிணியும் என்னைத் தீண்டாமல் உழைத்தாள்-அம்மை
பகலில் கதிராகி இரவில் நிலவாகி எம் வானில் ஒளிர்ந்தாள்.

மின்னும் நட்சத்திரவானில் கோடிச் சுடர்கள்
என் வானிலோ என்றும் ஒளிரும் சுடர்
என் அன்னை, உலகிற்கு அவளோ ஒரு பெண்
என்க்கு தாயே என் உலகு

அம்மா பிள்ளை என்னும் ஆனந்தம்
இறைவன் தந்த பேரின்பம்
எம்மோடு வாழ்ந்த பேரின்ப ராஜ உறவு
இறைவனே தாயாய் பூண்ட இன்பத்துறவு

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-03-09-2023

# அன்பின் அட்சயபாத்திரம் அம்மா

---

அன்புத் தாயாய் என்னருகே நீயிருந்ததை
அறியாமல்-எங்கும் உன்னைத் தேடியலைந்தேன்
என் இறைவா-உன்னைக் கண்டபின்
அறிந்து கொண்டேன் இறைவன் உண்டென்று-
அதுவும் தாயாய் எனக்கு நீயென்று.



ஆனந்தவானில் சிந்துபாடிய உன் வானம்பாடி-
நீ போனபின் தனிமைச்சிறையில்
தவமிருக்கும் கூண்டுக்கிளி?

ஒவ்வொரு பூவிலும் உன்முகம் காண்கிறேன்
ஒவ்வொரு தேன்துளியிலும் உன் அன்பைச் சுவைக்கின்றேன்
தென்றலாய் உன் அரவணைப்பு தேமதுரத் தமிழில்
தாயே உன் மகனின் பரிதவிப்பு.

வசந்தமும் போனது உன்னோடு-வாழ்வில்
உண்டு சுவைத்த அறுசுவையும் போனது உன்னோடு-இன்றோ
கனத்த மனமும் கண்ணீர் சிந்தும் விழிகளும் என்னோடு

உன் மூடிய விழிகளுக்குள் என் கனவுகள் வாடிட,
நின்றுபோன உன் மூச்சோடு என் வேணுகானங்கள் ஓய்ந்துபோயின.
என் உயிர்மூச்சே, நீயின்றி வாழ்வும் வெற்றுப் புல்லாங்குழலானது
தாயே உன் உறவின்றி சுந்தரமிழந்து சூனியமானது

அன்று, தலைப்பிறை பார்த்து என் முகம் நோக்கி
அதிஷ்டம் எனக் குதூகலித்தாய்-இன்று
தலைப்பிறை காணும்போதெல்லாம்-என் அதிஷ்டமே-
உன் திருமுகம் காணாமல் கலங்கித் தவிக்கின்றேன்
நெஞ்சுருகக் கரைகின்றேன்

அம்மா என் தாயே , ஏன் என்னை பிரிந்தாய்?
என் விழிகளிலே கங்கை, நெஞ்சிலே காங்கை
தெய்வமே தாயாய் மாறிய வரம் -தாயே
உன்னைப் போற்றும் வாழ்வோ இனிய தவம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29-08-2023*

# அம்மா என் ஆனந்த ராகம்

---



அம்மா, என் ஆனந்த ராகமே, உன்னோடு வாழ்ந்த பொழுதெல்லாம்,
உவமையில்லாப் பேரழகாக, உண்டு, கதைபேசி களித்த
நாளெல்லாம் பசுமை நிறைந்த நினைவாக, இதயம் சூடிய
பாசமலரே-என்றும் என் மனதில் உன் ஆனந்த நினைவே

காற்றாய் நீ கரைந்திருந்தால்-தாயே
என் சுவாசத்தில் நிறைந்திருப்பாய்
நீராய் நீ மலர்ந்திருந்தால்
நித்தம் என் விடாய் தணிப்பாய்



மண்ணாய் நீ மாறியிருந்தால்-மாதா
உன் மடியில் எனக்கு இடந்தருவாய்
விண்ணில் நீ கலந்திருந்தால்
நிலவாய் என்னைத் தழுவிடுவாய்

நெருப்பாய் நீ மாறியிருந்தால்
ஒளியாய் என் உலகை ஒளிர்வித்திடுவாய்
தாயாய் மலர்ந்ததினால் -என்றும்
என் நெஞ்சில் நிறைந்தாய்

பத்து மாதம் சுமந்து-உதிரத்தைப் பாலாய்த் தந்தவளே
மகனே என அன்பினால் என்னைச் சீராட்டி வளர்த்தவளே
மெழுகாய் எரிந்து-என் இருளை கலைந்து
என் வாழ்வை ஒளிர்வித்த தெய்வம் நீ அம்மா

தெய்வம் தந்த கொடை நீ அம்மா
நான் மடியும் வரைக்கும் மரணம் உனக்கு
இல்லை, என் நெஞ்சில் வாழும் தெய்வம்
நீதான் என்பதில் சந்தேகம் எனக்கில்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-08-2023

# அம்மா என் தெய்வம்

---

அன்று எங்கள் வீட்டில் மின்சாரமில்லை
அந்தி மயங்கிட ஒளிமலர்களாய் பூக்கும்
மண்ணெண்ணய் விளக்குகள்-



எம் அகவாழ்வின் இருளைப் போக்கிட
எப்போதும் ஒளிரும் கற்பூர தீபமாய்
தன்னை எரிக்கும் தாயின் உணர்வுகள்



முப்பத்தியாறு வயது -அப்பா-நீச்சல் வீரர்
நீந்தப்போய் நீரில் மூழ்கி மடிந்திட
முப்பத்தி மூன்று வயது கைம்பெண் என் தாய்

வயது பத்து, எட்டு, ஆறு, நான்கு, இரண்டு, ஆறுமாதக்
கைக்குழந்தை எனத், தான் பெற்ற செல்வம் ஆறும் நலம் வாழ
தனியனாய்-வாழ்வில் எதிர்நீச்சல் போட்ட வீர மங்கை
எனக்கு வாழ்வை கற்றுத்தந்த அம்மை.

காதலாகிக் கனிந்து கட்டிய மாங்கல்யத்தை,
இளமையில் காலன் அறுந்திட- பூவும்,
பொட்டுமிழந்து, மாங்கல்யம் அறுந்திட
குங்குமம் கரைந்து மங்கலம் இழந்த அம்மை

கேவிக்கரையும் கோகிலத்தின் செட்டைக்குள்
குஞ்சுகள் ஆறு-ஆறுதல் இல்லாத வாழ்வில்
விதவைக்கு ஆண்டவனே தேறுதலான பொழுது

கொழுகொம்பில்லாக் கொடியில் பூத்த வண்ண மலர்களை,
வாடாமல் காத்திடத் தன்னை தேய்த்து மணந்த சந்தனம்
தூபமாய் எரிந்து-எம் சுவாசத்தில் கலந்த சுகந்தம்-

மண்ணெண்ணய் விளக்கில் பாடம் படிக்க
மகிழ்வோடு அமர்ந்து-தாய்மை எம்மை இரசிக்க,
தானும் படிக்க கல்லூரியாய் நாளும் எம் வீடு.

அதிகாலையில் தலைமாட்டில் ஆவி பறக்கும்
தேனீரோடு எம்மைத் தட்டி எழுப்பி , படிக்கத் தூண்டி
எல்லோர் தலையிலும் எண்ணெய் வைத்து
படிக்கும் குழந்தைகளை பரிவோடு அணைத்து-
பாசமாய் சிரிக்கும் தெய்வம்

எம் வீட்டில் வறுமை இல்லை-எளிமையில்
வாழ்வு ஜொலிக்க-ஏழ்மை எம்மைத் தீண்டாது
தாய்மை விழித்திருந்து காக்க-இல்லாமை அறியாது
அன்பால் எல்லாம் சுவைத்த பெருமை.

வானொலி இல்லை-கற்ற தமிழ் நூல்களுக்கு குறைவில்லை
மாலையில் அவித்து வைத்த கறியை அதிகாலையில்
அன்னை சமைக்க தேங்காய் துருவி உதவிடும்
பிள்ளை, அவரின் செல்லப் பிள்ளை.

சமையல் அறையில் ஆரம்பிக்கும் பாடம்
சமைத்து முடிய-வீட்டுக்குள் தொடரும்.
அன்னையும் நானும் ஆருயிர் ஸ்நேகிதிகள்

சிரட்டையில் தந்த கறியை சிந்தாமால் சுவைத்து
நான் வழங்கும் புகழ்மொழிகளை
நோபல் பரிசிலும் பெரிதாய் நினைத்து
களித்துச் சிரிக்கும் தாய்மை

இரவிலோ ஆவி பறக்கும் பிட்டும் இறால் பாலாணாமும்
அமிர்தத்தை சொக்கவைக்க- உண்டு களித்து
பின் ஒழுங்காய் அமர்ந்து இறைவனை துதித்து
நான் படிக்க மற்றவர் படுக்கச் செல்வார்.

நள்ளிரவில் படிக்கும் என் குரல் கேட்க
“போதும் மகனே படு-காலையில் படிக்கலாம்”
பரிவோடு ஒலித்த குரல் மௌனித்ததென்ன?
உறவைப் பிரிக்க -மரணம்
உறவு சொல்லி வந்த கொடுமைதான் என்னே?

ஒன்றாய் அமர்ந்து உண்டு சுவைக்க
கைமணக்க-சோற்றில் நெய் மணம்
உண்டு மகிழும் தன் பிள்ளைகள் கண்டு
உண்ட மகிழ்வை கொண்டாடும் தாய்மை

சினை நண்டு, மட் இறால், கொடுவாய் மீன், மீன் சினை,
பன்றிக் கருக்கல், உப்பவியல், மாட்டிறைச்சி ஸ்ரூ, மிளகு தண்ணி,
உழுவா அரிசிக் குழம்பு, மீன் தலை உப்பவியல்-மிளகு இரசம்,
பொரித்த கத்தரிக்காயக் குழம்பு., சுட்ட கத்தரிக்காய் சம்பல்
என விதம் விதமாய் விடுமுறையில் நளபாகச்சமையல்கள்
குழந்தைகள் நாமோ அவரின் இரசிகைகள்

காலையில் இட்லி தோசை, சட்னி,
பொங்கல், பால் சோறு, முட்டை அப்பம்,
பொரித்த கொச்சிக்காய்-மாசி இட்டு
இடித்த சம்பல்—பாண்,

பழம் அமுதோடு வாழைப்பழம், சீனி பிசைந்து
கருக வைத்த பழங்கறியோடு உண்ண
அமிர்தம் சுவைத்த தேவர் வாயில் நாவூற-
அன்னை பிசைந்தூட்டும் இனிய அமுது.

இன்றோ எல்லாம் வெறும் கனவு
விழிகளில் எட்டிப் பார்க்கும் கண்ணீர்
இதயத்தில் கொதித்து துடிக்கும் செந்நீர்.

எல்லோரும் சேர்ந்து ஒரு வட்டமாய் நாம் அமர
சோறு கறி பிசைந்து, கவளமாய் தந்தும்-
செல்லமாய் ஊட்டியும்-நிலாச்சோறு உண்டு
களித்துச் சிரித்த நாட்கள், கனவாயின

ஒரு போதும் உணவிற்கு குறைவில்லை
மாலையில் சோளங்குலை-இல்லையேல்
அவித்த மையோர் கிழங்கோடு-
அரைத்த பச்சை மிளகாய் துவையல்

எந்நாளும் வசந்த காலம்-எப்பொழுதும் தாயே எம் உலகம்,
மாதம் ஒரு நல்ல படம் பார்க்கத் தூண்டி, கதைகேட்டு இரசித்து,
நல்ல படங்களை பார்க்கவும், இராமாயணம், மகா பாரதம்
நன்நூல்களை படிக்க நாளும் வாசிப்பை ஊக்குவித்த தெய்வம்.

எங்கள் இல்லத்து நூல்நிலையம்-கற்ற வித்தையெல்லாம்
தேவகுருவாய் எமக்கு கற்றுத் தந்த அறிவாலயம்
குஞ்சுகளை தன் செட்டைக்குள் பொத்தி காத்த தேவாலயம்

வாழ்ந்த குடிலை வளமிக்க அறிவாலயமாக்கி
ஈன்ற பிள்ளைகளுக்கு-உண்மையும்
ஒழுக்கமும் உயர்ந்தது என கற்பித்த ஆசான்.
ஒன்றாய் கூடி செபிக்க பழக்கிய இறைநேசன்

ஐவர் நாம் அம்மா, அக்கையோடு தெருவில் நடந்தால்-
குந்தியும், பாண்டவர்களும் என பார்த்து மகிழும் ஊர்.
வாழ்வெனும் குருஷேத்திரத்தில் தனித்துப் போராடிய கைம்மை-
கீதை சொன்ன கண்ணணாய் என் அம்மை

போர்க்களத்திலும் -புல்லாங்குழல் இசைத்த
வேணுகோபாலனாய்த் தாய்மை.

பண்பாயில் நாம் உறங்கி பல கதைகள் தோழமையோடு பேசி
தோழியாய் நின்றவள் மண் வேண்டாம், பொன் வேண்டாம்
மங்கை எனும் நல்லாள் வேண்டாம் -எந்நாளும்
நீ வேண்டும் தாயே- என் தெய்வமே என கவிபாட
குறும்புப் புன்னகையோடு என்னை இரசித்தவள்

சாம்பிராணி மணக்க வீடு சிரிக்க
-நாம் புன்னகைக்க-இருப்பதை கொண்டு
எளிமையாய் வாழ்வது எப்படி
என சொல்லித் தந்த பொருளாதார நிபுணர்.

பல மைல் தூரம் கற்பிக்கச் சென்று
களைத்து திரும்பி-வீட்டு வேலைகள் செய்து ஓய்ந்த
வேளையில் வலிக்கும் தன் கால்களை பிடித்துவிட
சிறு தொண்டனாய் என்னைத் தேர்ந்த தெய்வம்

பாயில் உறங்கிட-போர்வையாய் தன் சேலையைப்
போர்த்தி, தாய் மணம் மாறாத சேலைக்குள்
தாய்மையின் அரவணைப்பில் நான் தூங்கிட
சின்ன குழந்தையாய் என்னை சீராட்டிய அன்னை

கடன் பட்டார் நெஞ்சம்போல்
கலங்கினான் இலங்கை வேந்தன் என்றே
கடனுக்கஞ்சி- பிறருக்கு
கடன் கொடுத்த உதவிய காவியத்தலைவி

இறைபக்தியை, பிறர் சிநேகத்தை,
நட்பை எப்போதும் கற்பாய் காத்தவள்.
நன்னூாலே உன் துணை என நூல்களை
நேசிக்க சொல்லித் தந்த கலைமகள்

எது வாங்கினாலும் அழகா என, என் அபிப்பிராயம்
கேட்டு, அழகு, பேரழகு என் நான் பாராட்ட
கவிதை இரசனை கொண்ட உள்ளம், பாடல் எழுதி,
நாடகம் பழக்கி பெயர் பெற்ற ஆசிரிய நெஞ்சம்.

வேலைக்குச் சென்ற மகன்-விடுமுறையில்
அழகிய மீசையோடு வீடு திரும்பிட
ஆசையாய் பார்த்து பாராட்டிய-தாய்மை

களைக்கும் -அம்மாவுக்கென்று
ஒவ்வொரு மாதமும் சஸ்டெஜின் வாங்கி வர
கண்கலங்கி என்னை அணைத்திட்ட அம்மை

நோயுற்ற என்னைத் தேற்றிட-தனியாய்
பதுளைக்கு வந்த அன்னை-கப்பம் கேட்ட
புலிகளிடம் சிறைப்பட்ட என்னை -விடுவிக்க-
காயமுற்ற மெய்யோடு தேடி வந்த தாய்மை

இடி தாங்கி இல்லாத பூங்கொடியை, அண்ணன், தம்பியின்
அகால மரணங்கள் பேரிடியாய் தாக்கி, மண்ணில்
வீழ்த்திட, எல்லாம் இறை சித்தம் என்றே மனதை
தேற்றி மறைவாய் அழுத தாய்மை.

தரப்படுத்தலால் நான் வீழ்ந்தபோது,என் கடும் முயற்சியைப்
பாராட்டி, பரீட்சை உனக்கு தடைக்கல் அல்ல, அறிவுத் தேடலே
உன் பயணம்-மகனே: கற்றலை நிறுத்தாதே, ஞானம் தேடு
என்னைப் புரிந்து ஊக்கமூட்டிய அன்னை

கற்றலுக்கு முடிவில்லை, பெற்றவளோ வானத்தில்-
எண்ணிப் பார்க்க எட்டிப் பார்க்கும் கண்ணீர்.
வாழ்வினால் கீதை சொன்ன கோதை-நாளும்
நடந்த வழியோ குருஷேத்திரப் பாதை

பாலக்குடா, மடுக்கோயில் எனச் சீடர் எம்மை
புனித யாத்திரையாய் கூட்டிச் சென்ற சற்குரு
படைத்தவன் அழைப்பை பணிந்தே ஏற்று
தனியே தன் இறுதி யாத்திரை தொடர்ந்த ***தெய்வ உரு.***

நித்தம் எம்மை மகிழவைத்த தாய்-மீளா நித்திரை கொள்ள-
இளகிய நெஞ்சில் தூங்காத நினைவுகளுக்கோ பஞ்சமில்லை
கலங்கிய விழிகளில் பாயும் கங்கையோ இன்னமும் காயவில்லை

பெருகத் துடிக்கும் கண்ணீருக்கு அணை கட்டி-இதயவீணயில்
உறங்கிட்ட-உதய இராககங்களை மீட்டிப் பார்க்கின்றேன்,
தாய் எனும் தெய்வத்தை மனதால் போற்றி
வெண்பாவால் எழுதி பக்தனாய் தொழுது மகிழ்கின்றேன்.

விழிநீர் பூக்கள் உதிர்ந்தோட -நெஞ்சில் பாச மலராய்
அன்னை பூத்தாட உண்ணும் போதும், உறங்கும் போதும்
படிக்கும் போதும், எழுதும் போதும்-எந்நேரமும்
எனை ஆட்கொண்ட தெய்வமாய் என் தாய்.

நீச்சல் வீரர் என் தந்தை நீரில் மூழ்கி நினைவாகிப்போயிட
நீந்த தெரியாத இளம் விதவை என் அன்னை
-எதிர் நீச்சல் போட்டு- சோகக் கடலை தாண்டிய
வீராங்கனை-என்னே அவர் பெருமை

இறுதி மூச்சை என் மடியில் ஈந்து, இறை அழைப்பை
ஏற்று-வானகத்தில்ஒரு நாள் சந்திப்போம் மகனே
போக மனமின்றி-இறைவனை காக்க வைப்பது
முறையன்று என்றே என்னை விட்டுப் பிரிந்த தெய்வம்.

கட்டியணைத்த உடலைக் கண்ணீரால் அபிஷேகித்து
விட்டுப் பிரிந்த உறவை விடாது பற்றி புலம்பி
அழும் குழந்தை-



அருஞ் சொத்தான உடலை மண்ணில் விதைத்து
பித்தான மனதில் முளைவிட்ட என் தாயின்
மலரும் நினைவுகளைப் பெரும் சொத்தாக எண்ணி
தனிமையில் வாழும் செல்லப்பிள்ளை.

இன்றோ எல்லாமிருந்தும்-தாயில்லை
வாடிய மலராய் தாய் உறங்க, வாடும் தேன்
தும்பியாய் மனம் தவிக்க, அம்மா என்றே
கதறித் துடிக்க அன்னமிட யாருமில்லை

கண்ணீர் துடைத்து-கவலையை மறந்து
தலைசாய்க்க அன்னை மடியில்லை
அம்மையப்பனாய் வாழ்ந்த தெரியவமில்லை
-அநாதையா நான் புரியவில்லை?

அன்னையருக்கு ஒரு போதும் மரணமில்லை
அன்புப் பிள்ளைகள் மறந்தாலும், இறைவன்
அவர்களை மறப்பதில்லை, வாழும் தெய்வங்களே தாய்கள்
கண்டவன் சொன்ன உண்மையிது

*"உலகிற்கு அவர் ஒரு சாதாரண பெண்-எனக்கோ
என் உலகே அவர்தான்."*

விண்ணோ, மண்ணோ, விரிகடலோ, தீயோ, காற்றோ
அறுத்து கட்டமுடியாத தொப்பிள் கொடியுறவு
இரத்தமும் சதையும் உயிரில் எழுதிய அம்மா பிள்ளை உறவு

***அன்பே என் உலகம் -தாயே என் தெய்வம்.***

விட்டுப் பிரிந்த உறவை வியந்து, விடாது புலம்பும்
குழந்தை மனது, அன்னையே தெய்வம் என்றறிய
ஆண்டவனே தாயாய் வாழ்ந்த நிகழ்வு

இறை தந்த பெரும் வெகுமதி-அம்மா,
அம்மாவே தெய்வம், வாழும்போது
மகிழவைத்துப் பாருங்கள் வாழ்வீர்கள்.
தாயின் ஆசி இல்லாமல் வாழ்வில்லை



அறுத்துக் கட்டும் தாலி உறவு மாறலாம்
அறுத்து கட்ட முடியாத, குருதியும். சதையும்
பிணைந்து கட்டிய தொப்பிள் கொடியுறவு
அன்னையின் உறவு

வாங்க முடியாத பெருஞ்செல்வம், இறைவன் தந்த
அருட்செல்வம் அம்மா, அன்பினால் போற்றுங்கள்
அன்னை காலடியில்தான் சொர்க்கம்
அறிந்தால் அறிவதற்கு ஏதுமில்லை, அகமகிழுங்கள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29-08-2023*

# அம்மா என்னும் பேரின்பம்

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

என்ன தவம் செய்தேன்-தாயே
என் மடியில் நீ கண்ணயர?
என் கண்காண ஒரு பூவாய் உதிர்ந்து
என் பொற்சுடரே நீ அணைந்தாய்





விழி மூடி நீ கண்ணயர்ந்தபோது
விழிநீரில் மூழ்கிய நான் வியப்பில் ஆழ்ந்திட
புத்தம் புது மலர்போல் உன் தோற்றம்
கத்தும் கடலலையாய் என் இதயம;.

உன் பூ முகத்திலும், பொன்னுடலிலும்
நான் கண்ட பேரமைதி "**சத் சித் ஆனந்தமாய**
**'**" இறைசந்நிதியில் நீ அடைந்த
"***ராஜ பேரின்பமோ***" –***அம்மா***

தாயைத் தேடிக் கதறும் கன்றாய்-இன்றும்
உன்னைத் தேடித் தவிக்கும் என் உள்ளம்
மழை காணாப் பயிரைப்போல,
வாடித் துடிக்கும் என் நெஞ்சம்.

நீயிருக்கும்வரை தனிமையும் எனக்குத்
தேனானது, நீ போனபின் பெருங்கூட்டமும்
என்னை வாட்டும் கொடுந்தீயானது

நெய்யின்றி அணையும் விளக்காய்,
உன் அன்பின்றி நெஞ்சம் வாடிட,
வற்றிய குளத்து ஆம்பலாய் இதயம் புலம்பிட
ஏன் என்னைப் பிரிந்தாய் தாயே?

மீட்டிட யாருமின்றி புழுதியில் கிடக்குதம்மா
உன் பொன்வீணை, சூடிட நீயின்றித்-தாயே
வாடி உதிருதம்மா உன் வண்ணப்பூமாலை

***அன்பின் அமுதசுரபி என்றும் எனக்கு  நீயே என் தாயே***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-28-08-2023
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

# அம்மா எனும் வரம்

---

என்ன தவம் செய்தேன்- தாயே
உன் வயிற்றில் மகனாய் நான் பிறக்க,
என் தவமல்ல, நான் பெற்ற வரமல்ல-தாயே
இறைவன் எனக்கிந்த பெருங்கொடை-நீயே



மண்ணிலும் செழுமை அம்மா உன் மனம்
விண்ணிலும் விசாலம் உன் இதயம்.
என் இருண்ட இரவுகளுக்கு ஒளியீந்த மெழுகுவர்த்தி நீ
என் கனவுகளுக்கு வண்ணம் தந்த வானவில்-நீ



இன்றும் என் நினைவுகளுக்கு இனிமை சேர்க்கும்
இன்பத்தேன்-என் தாயே நீதானம்மா
நீயில்லா உலகம் நிலவில்லா வான் ஆனது
உன் தேனீ, வண்ணமலரே அமுதின்றி வாடுது

உயிரும் மெய்யும் ஈந்து, எண்ணும் எழுத்தும் தந்து,
உறவாய், என் இனிய உலகாய் விரிந்த விசும்பே
மாதா – பிதா- குரு- தெய்வமாய் மலர்ந்த-
என் உறவே உலகே நீதானம்மா

வானும், மண்ணும் வண்ணமிழந்தாலும்
வள்ளுவன் முப்பாலும் திரிந்து பொருளிழந்தாலும்
வானுறும் நிலவும், தேனூறும் மலர்களும் சாட்சியாக,
என்னிதயம் உன்னை ஒருபோதும் மறவாது-தாயே
என் தெய்வம் நீயே என உன்னைப் போற்ற மறவாது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-04-2023

# அம்மா

---





வித்தாய் விழுந்த எனக்கு விளைநிலமாய் மாறிப்
பெருநிதியெனப் பத்தியமிருந்து காத்துப்-பத்துமாதம்
பூஞ்சுமையெனச் சுமந்து-பெற்றெடுத்துப்
பெயர் சூட்டித் தாயே நீ மகிழ்ந்தாய்

உயிர் தந்து, மெய்தந்து, உயிர்ச் சுவாசம் தந்து
உதிரத்தைப் பாலாக்கி உணவாய்த் தந்து
அம்மா என்னும் தெய்வீக உறவு தந்து-
உன்னுதரத்தில் வாழ்ந்து வளர இடமீந்தாய்

படையாய்த் துயர் என்னைத் துரத்திட்ட போதும்
பீடை எனை சிறையெடுத்திட்ட போதும்
உன் மடியில் புகலிடம் தந்து-தாயே
என் விழிநீர் துடைத்தாய்

வெண்ணிலாக் காட்டி -அமுதூட்டிய நாட்களிலும்
தாலாட்டுப்பாடித் தூங்கவைத்த வேளைகளிலும்
உன் மடியில் எனக்காய்த் தாயே நீ
ஆனந்த சொர்க்கத்தைச் சிருஷ்டித்தாய்

முத்தாய் நான் வளர, மூன்றாம் பிறையாய்-
முழு நிலவே நீ தேய்ந்தாய்-அன்புத்தத்துவமே என் ஆருயிரே
கத்தும் கடலேழும், கருவான் நிலவும் சாட்சியாக
என் சித்தம், நினைப்புச், செய்கை உள்ளவரை என் உயிர்
உன்னை ஒரு போதும் மறவாது

அம்மா என் தெய்வீக உறவே,
முக்கனியும், முப்பாலும் சுவையிழந்தாலும்,
முத்தமிழும், முழுநிலவும் ஒளியிழந்தாலும்,
என் உள்ளம், ஒருபோதும் உனை மறவாது

அன்னையைப்போல் தெய்வம் உண்டோ?
தாயிற் சிறந்த கோயிலுமுண்டோ?-
தாயின் காலடியில் சொர்க்கத்தை வைத்த இறைவன்
தன்னைப் போற்றுவதும் தாயைப் போற்றுவதும்
ஒன்றெனச் சொல்லாமற் சொன்னது -உன்னைப்போல்
தாய்களைக் கண்டதனாலோ? என் அம்மா

முப்பாலினும் இனிய தாய்பால் தந்த தெய்வமே,
முத்தமிழைச் சொல்லித்தந்த குருவே,
என்றும் நீயே என் அருள்நிதி
உன் வாக்கே என் திருமந்திரம்,

நான் பாடும் திருப்புகழும் நீயே-நான் ஓதும்
தேவாரமும், படிக்கும் திருவாசகமும் உனக்கே,
அறம், பொருள், இன்பம் கடந்து
அடையும் வீடுபேறு -உன் காலடியில்தான் தாயே

என்றும் போராட்டமான உலகில்
எதிர் நீச்சலான உன் வாழ்வே- எனக்கு நீ அருளிய கீதை,
எம்மைக் காத்து வளர்த்திட-நீ பட்ட துன்பமும்,
சுமந்த பாரச்சிலுவையும் -எனக்கு மீட்பளித்த
உன் கல்வாரிப் பாதை அம்மா

என் சொத்தும் அரியசொந்தமும் என்றும் நீயே
தெய்வமென்று தொழுவதும் உன்னைத்தான் தாயே
நீ வாழும் வீடே என் சொர்க்கம்,
நீ இல்லா உலகோ என் நரகம்?

உயிரே ஒரு போதும் மறவாதே
அன்னையெனும் தெய்வீக அன்புறவை
உறவே ஒரு போதும் மறவாதே
தாயே தெய்வம்

அன்பு நடமாடும் திருக்கோயில் அன்னை
தாயே தெய்வம்-அன்பே அவள் வேதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-11.04.2023*

# அம்மா என் ஆலமரம்

---





அருகாய் வேரூன்றி, ஆலாய் விழுதுவிட்டு
நிழல் ஈந்த தாயே-இன்று நிழலின்றித் தவிக்க
தலைசாய்க இடமின்றி நாடோடியாய் அலைய
தாயைத் தேடும் கன்றாய்க் கதறும் நெஞ்சம்

புயலும், பெருமழையும் வீழ்த்தாத உன்னை
மூப்பும் பிணியும் சாய்த்ததே-பெருநிதி
உன்னை என்னிடமிருந்து காலன் பிரித்ததே!
என் வாழ்வும் நெய்யின்றி வாடும் சுடரானது

விண்போனது தாய் உறவு, நீரின்றிக் காயும்
பயிரானது சேய்மனது, பூஞ்சோலையும்
பாலையாகிட, தேனின்றி வாடுது பூங்குருவி.

தாயன்பும் பொய்யாய்ப் பழங்கதையாய் மாறிட
சோகச்சுழலில் சிக்கித்தவிக்கும் மனது
அன்னையில்லாத வீடு காடாய் மாறிட,
அநாதையான குழந்தை நிம்மதி தேடுது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-08-2023

# மலரும் நினைவுகள்-அம்மா

---

மலரும் நினைவாய்த் தாயே-உன்னை என் மனதில் இருத்தி,
வளரும் சோகத்திற்கு அணை கட்டி-கண்ணீர்ப்பூக்கள் உதிர-
மண்ணில் உன் பொன்னுடலை விதைத்தேன் நீ முளைத்திட,
மறு பிறவியிலும் உன் மகனாய் நான் பிறந்திட என் தெய்வமே



என் தாயே அமைதியாகத் தூங்கு,
உன் அருகில் நானிருந்தே-நீ உறங்க
கண்ணீரில் பாடுகிறேன் தாலாட்டு



முட்கள் தைத்து கால்கள் வலிக்க, சிலுவை சுமந்து
தோள்கள் கன்றிச் சிவக்க, சுகந்தமாய் உன்னை எரித்தே
எம் வாழ்வை வசந்தமாக்கிய தெய்வமே,நெஞ்சம் கரைந்து,
கண்ணீர் பொழிய, தாலாட்டுப் பாடுகிறேன் தாயே நீ தூங்கு

உன் மகனாய் நான் பிறக்க-என் மகளாய்
நீ இனிக்க, என் மனமும் தாய்மையின் சுகம் காண,
இறைவன் ஈந்த வரம் பெரிதம்மா

என் மகனே என விழித்து-இருகரங்களால்
என்னை அணைத்து மகிழவைத்தாய்-பக்தனாய்
எனை ஆட்கொண்டு சிறுதொண்டனாய்ப் பணிபுரிய-
தெய்வமே நீ வரம் தந்தாய்

ஏதுமில்லாதவனுக்கு யாதுமாகி நின்றவளே
புல்லாய்க் கிடந்த என்னைப் புல்லாங் குழலாக்கி
கண்ணனாய் மகிழ்ந்தாய்-கல்லாய்க் கிடந்தவனை
சிலையாக்கி காஞ்சித் தலைவானாய் அக்களித்தாய்

என் வானில் கதிரும், நிலவுமாகி நின்றவளே,
என் ஒளி விளக்கில் நெய்யும், திரியுமாய் ஒளிர்ந்தவளே,
நீயில்லா என் உலகும் இருளானது-தெய்வமே நீயின்றி
என் இதயகோயில் பாழானது.

விண்ணில் நீயிருக்க, மண்ணில் நான் தவிக்க
கண்ணீர்ப் பூக்களில் பசியாறும் உன் பூங்குருவி
கவலைச் சோலையில்-முகாரி பாடும் உன் பூங்குயில்

தாயுமாகி-நினைவறிந்த காலம் முதல் தந்தையும், குருவுமானாய்,
நாளும் நான் சுவைக்க அன்னையே  தெய்வமென அறிய வாழ்வும்,
வழியும், உண்மையுமானாய்-என் தெய்வமே இப்பிறப்பிலும்,
எப்பிறப்பிலும், நீயே என் தாய்! நீயே என் தெய்வம்!

காணும் ஒளியும் நீ எனக்கு, கேளும் ஒலியும்,
ஊறும், உறவும் நீ எனக்கு
அறுசுவையும், மலர் மணமும் நீ எனக்கு,
ஆறறிவும், அன்புலகும் நீ எனக்கு
அம்மா என்ற “ இறைவார்த்தை”
மனுவுருவாகி எம் நடுவே குடிகொண்டதும்
உன்னால் எனக்கு

தாயே-தெய்வம் தந்த கொடையே
கதிரும் , நிலவும் களையிழந்தாலும்
கடலும் , நதியும் நீர் இழந்தாலும்
என் உள்ளம் உனை ஒருபோதும் மறவாது
என் உயிர் -உன்னைத் தொழாமல்
ஒரு நாளேனும் உயிர் வாழாது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28-04-2023*

# அம்மா-பேரின்ப ராஜ உறவு

---

அன்னையும் தந்தையுமாகி, ஆனந்தப்-பேரின்ப-
ராஜ உறவுமாகி, என்னில் கலந்து பேரின்பமே-இறைவன்
எனக்கீந்த ஈந்த பெருங்கொடை நீதானம்மா.



குருவாய்த் தெய்வமாய்க் கூடி மகிழும் நட்பாய்
பயில் தோறும் இனிக்கும் நன்னூலாய், என் நெஞ்சை
நிறைத்தவளே-ஒப்பற்ற உன் மடியில்-என் பேரின்பம்-
உன் உறவோ இறையின்பம்



கசப்பை நீ சுவைத்து, இனிப்பை நான்
சுவைக்க-உன் தியாகங்கள்-உன் மடியில்
தலை வைத்து நான் உறங்க-கனவாய்க்
கலையும் என் மனத்துயரங்கள்

மூப்பும், பிணியும் உன்னை வாட்டிட- என் குழந்தையாய்
உன்னைத் தாலட்டிச் சீரட்டிட, தாயே நீ தந்த வரம் பெரிது
நான் நூற்காத தவத்திற்கு – என் தாயாய்
இறைவன் தந்த வரமோ விசும்பிலும் பெரிது

நோயுற்று நீ நொந்தபோது-என் இதயமோ
கண்ணீர்ப் பூவனம் , நெய்யின்றி அணைகின்ற
சுடராய் நீ தவித்தபோது
என் வாழ்வோ தகிக்கும் பாலைவனம்.

அம்மா என் ஆருயிரே-
அலை கடலும், வான் நிலவும் சாட்சியாக,
முத்தமிழாய், முக்கனியாய் இனித்த அன்புறவே
என் சித்தம் நினைப்பு செய்கை உள்ளவரை
என் உள்ளம் ஒரு போதும் உன்னை மறவாது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-08-2023

# அம்மாவே தெய்வம்

---

அம்மா இல்லாத என் வாழ்வு சோகவனச் சிறையானது
உண்டாயா?, குடித்தாயா? நன்றாய் உறங்கி எழுந்தாயா?
என் மகனே, என என்னைக் கேட்க யாருமில்லை,
தாயில்லாத வீடு தெய்வமில்லாத கோயிலானது.

அம்மா என்றழைக்க யாருமில்லை, மகனே
என விளிக்கத் தாயுமில்லை, அன்னை மடியும்,
அறுசுவையும், அம்மாவோடு போனது
சோகங்கள் என் சொந்தமானது

மகனே என அழைத்த வீட்டில் மௌனம் குடிவந்திட,
மலர்ப் பாதங்கள் உலாவிய வீட்டில் மாதா
மாலையிட்ட படமானாள், அம்மா என அழைத்த
நாவில் மௌனம் குடிவந்திட என் தெய்வம் வானகம் போனாள்

சின்னக் குழந்தையாய் சீராட்டிய தாய் மறைந்திட
சிணுங்கும்  குழந்தை உள்ளம் -தாயைக் காணத்
தவித்திடும் பிள்ளை மனம்.

அம்மாவைப்போல் தெய்வமில்லை
அம்மாதான் தெய்வநிலை-அன்பைத் தவிர
அவளுக்கு தெரிந்தது ஏதுமில்லை
பிள்ளைதான் பொக்கிஷம் என்பது
தாய்மையின் உன்னத நிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16-06-2023

# அம்மாவின் கைப்பக்குவம்

---

எம் அன்னையின் சமையலில்
அறுசுவை தாண்டிய பெருஞ் சுவைகள் ஆயிரம்
அவர் கைப்பக்குவத்தில்-தேவர்களையும்
வாயுறவைக்கும் அதிசயங்கள் பல்லாயிரம்

பல நாள் போனபின்பும் வாசம் மணக்கும், அம்மியும் குழவியும்,
உரலும் உலக்கையும், அன்னையின் கைவண்ணத்தை சொல்ல
உண்டு சுவைத்த பச்சடியையும், துவையலையும்
இதயம் இன்றும் எண்ணிச் சுவைத்து மெல்லும்

விடுமுறை நாட்களில்-ஆறு பிள்ளைகளுக்கும் அறுசுவை தாண்டிய
பெருஞ்சுவை விருந்து, அன்னையின் அற்புத சமையிலில்
உண்டு களித்து -கை கழுவியும் வாய் மணக்க, விடும் ஏப்பத்தில்
நிறைந்த வயிறும் சிரிக்க பூவாய் மலரும் தாயின் முகம்
வாழ்த்தி புகழும் சேய்களின் மனம்



சுடுசோற்றில் நெய் மணக்க -மீன் போட்டு சுண்டிய
குறிஞ்சா, திராய், முருங்கை சுண்டல்கள்
எண்ணெய்யில் வதக்கி வாயூற
வழுதுளங்காய், தும்பன்காய் வதக்கல்கள்.



எப்போதும் ருசிக்க பாற்சோறும், சுட்ட கருவாடு,
இறால் பொரியல்கள், உயிரும் மெய்யும் இனிக்க
சினை நண்டு.கொடுவாய் மீன் சினை
பன்றி கருக்கல், மாட்டிறைச்சி குழம்புகள்

மருந்தாய் உளுவா அரிசியும் மாசியும், வெங்காயுமும் போட்டு
தாளித்த குழம்பு ஒட்டி, பரட்டை, கிழக்கன்,
முட்டை செவுந்தல்கொய், முரல் என மீன் வகைகளில்
சமைத்த பல்சுவை மிளகு தண்ணிக் குழம்பு

சூடை, பாரை, கீரி , சூரன், அறுக்குளா எனக் கடல் மீன்கள்
குழம்பில் கொதிக்க, வாசம் மூக்கைத் துளைக்க, சடச்சுட சோறுண்ண
அழைப்பு-இன்றும் பெற்றவளை எண்ணும் பிள்ளையின் மனதிலே
சொர்கத்தில் வாழ்ந்த பேரின்ப நினைப்பு

பொரித்த வாழைக்காய், சுட்ட கத்தரிக்காய் சம்பல், நெஞ்சில் இனிக்க
பொரித்த கத்தரி குழம்பு-எண்ணத்தை சுண்ட, கயலும், மணலையும்
அரைத்த கொச்சிகாய் குழம்பில் மணக்க சுடச்சுட சோறு

பீர்க்கும், பிஞ்சி முருங்கையும், அரைத்த தேங்காயும்
இட்டுச் சமைத்த கறி இதயத்தை சிலிர்க்க, கணவாய், மட்டி,
பால் நெத்தலி வாயில் உமிழ் நீரை வரவழைக்க-தாயின்
கைப் பக்குவத்தில்-அமுதிற்கு பல நூறு பெயர்கள்.

மையோர், நாடங்காய், அகத்தி, முருங்கை
நெத்தலி, மீன் தலை, இறால் இட்டுச் சமைத்த
பாற்சொதி வகைகளோ பலப்பல

அறுசுவை தாண்டிய அவள் சமையலில்
ஆயிரம் சுவைகள்- ஏழு ஸ்வரங்கள்
தாண்டிய பல நூறு ராகங்கள்

அட்டமா சித்தியும் கடந்த அரிய நளபாகமாய்
நவரெத்தினங்களுக்கீடாகாத தீஞ்சுவை அன்னமாய்
தாய்மை பரிமாறும் சோறும் கறியும்.

அன்னையின் சமையலை எண்ணிட இன்றும்
வாயில் நீர் ஊறும்
இன்று யார் தருவார்-இப்படி கறி சோறு என
-அன்னைக்காய் பிள்ளையும் ஏங்கும்.

தாய்பாலோடு தன் குருதியைக் கலந்தவள்
அன்னமிடும்போதும் எண்ணத்திலும் இதயத்தில் நிற்கவோ
சோறு கறியையும் அமுதிலும் இனிதாய்ச் சமைத்தாள்
உண்ணு மகனே என எங்களை ஊட்டி வளர்த்தார்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-5-2023

# அன்னை ஒரு ஆலயம்

அமுதை தாய்ப் பாலிலும், ஆனந்த சொர்க்கத்தை
அன்னையின் காலடியிலும் வைத்த இறைவன்
தன்னைத் தாயாக உருமாற்றிப் பூண்ட
பெண்மையின் தூய தவக்கோலம் தாய்மை



உதரத்தை வீடாக்கி, உதிரத்தைப் பாலாக்கி-என்
உலகம் நீயென்றே பத்தியமிருந்து
பத்து திங்கள் என்னைச் சுமந்தாய் தாயே



பாலூட்டும்போதும், தாலாட்டும்போதும்-
தாயே, நீ பாடிய பாடல்கள்
கம்பனையும், கவி காளிதாஸனையும்
விஞ்சிடும் காவியங்கள் அம்மா.

வாசிப்பை நேசிக்கவும்-என் நெஞ்சம் நன்நூல்களின்மேல்
வாஞ்சை கொள்ளவும் வரம் தந்த கலைமகளே-
உன் மடியில் நான் கற்ற இராமாயணமும், மகா பாரதமும்
என்றும் என் நினைவில் நிற்க-கீதையின் குருவாய்
இறைவன் தந்த கொடை தாயே நீ அம்மா.



நான் நோயுற்றபோதும்-புலிகளிடம்
சிறைப்பட்டுத் துன்புற்றபோதும்
தீ சுட்ட மலராய் வாடி-நெய் விளக்கேற்றி
இரவு பகலாய் இறைவனை வேண்டி நின்றாய்



தம்பியை இயக்கம் பிடித்துச் சென்றபோது
நொந்தழுத நீயும்-நாளும் கச்சேரிமுன்
தாய்களோடு தாயாய்- இரு வாரம் உண்ணா
நோன்பிருந்தே அவனை மீட்டெடுத்தாய்

தம்பி காணமல் போனபோதும்-அண்ணா
அகாலமாய்க் கொல்லப்பட்டபோதும், தாயே-நீயுற்ற
வேதனையை சொல்லத் வார்த்தைகளில்லை.

சோகச் சூறாவளி உன்னைச் சூறையாடிச்
சிலுவையில் அறைந்த கொடிய நாட்கள் அவை
அழுது புலம்பி ஆறாத் துயரில் வாடக்-கடவுளும்
உன்னைக் கைநெகிழ்ந்த சோதனை
உன் விசுவாசமோ வானுயர்ந்த சாதனை

நீயோ நாளும் தெய்வம் தொழுது
எல்லாம் இயேசுவே எனக்கெல்லாம் இயேசுவே
என்று கண்ணீர் பொங்க அழுது பாடினாய்





நோயுற்ற என்னைத்-தாயே நீ நீராட்டும்போது
வெட்கப்படும் இளைஞன் என்னைச் சிண்டி
என்றும் நீ என் குழந்தையடா என் மகனே என்றாய்

உறங்கி நாம் விழிக்கும்போது
உறங்காத உன் தாய்மையும்-தலைமாட்டில்
சூடு பறக்கும் தேநீர் கோப்பையும்
காத்திருந்த நாட்கள் கனவாகிப்போனதே
விழிகளில் கண்ணீர்பூக்கள் மலருதே அம்மா

பாண்டவரும் குந்தியுமாய் ,பாதையில் நாம் செல்லும்போது
ஊர் மகிழ்ந்து எம்மை வாழ்த்தி நிற்கும்
உன் உள்ளமோ அதைக் கேட்டு மகிழ்ந்திருக்கும்

பசியும், நோயும், வறுமையும் வாட்டாது
உண்மையே தெய்வம், கல்வியே செல்வம் -என
வாழ்ந்து காட்டிய அன்னையும், ஆசானும் நீ அம்மா





வாழ்வை எமக்கீந்த வள்ளலே-
முதல் ஏழு வள்ளல்களிலும் பெருவள்ளல் நீ அம்மா
அறம் பொருள் இன்பம் என, வாழ்ந்து காட்டிய வீடே
வானகம் நீ போனபின்-வையகமோ எனக்குச் சுடுகாடு

உடலும், உயிரும் உன் கொடையாக,
கல்வியும், தொழிலும் உன் உழைப்பாக
தாயன்போ காக்கும் நிழலாக-என் நெஞ்சில்
தேனாய் இனிக்கும் உன் நினைவுகள் தாயே

மரணம் எம்மைப் பிரித்தாலும்-என்றும்
மடியாத உன் நினைவுகள்
என் நெஞ்சிலும், உயிர் மூச்சிலும் தாயே.

என் முதல் காதலும் நீ, காதல் கலையாமல்-
கல்லறையில் உறங்கும் என் கடைசிக் காதலியும் நீதான்
அம்மா, உன்னோடு ஒரு பாயில் உறங்கிய இன்பம்-இன்று
பஞ்சணையிலும் இல்லை-தாயே
பாரிஜாதமலர் மெத்தையிலும் இல்லை

காதலும் கடந்துபோகும் உலகில்
காலமெல்லாம் நிலைப்பது தாயன்பே
மாயையான காதல் உலகில்-மாறாத
அன்னையின் அன்பு என்றும் தெய்வீகமே

நிலா காட்டி -வயிறு நிறைந்திடச் சோறூட்டுபவள் தாய்
காதல் நிலா கண்டு கவிதை சொல்லி கடைசியில் ஏமாறுபவன் மகன்.
அன்பே உன் தவம் தாயே, அன்பே நீ தரும் உன்னத வரம்

சட்டத்தால் ரத்தாகும் பந்தம் தாலிக்கொடி உறவு
சட்டமும், சாவும் பிரிக்காத சொந்தம் தொப்பிள்கொடி உறவு
தாய் மடியே என் தாய் நாடு-அம்மாவே என் தாய்மொழி
அவளே என் தேசியகீதம்

என் தவமும், கடவுள் எனக்கிந்த பெருவரமும்
என் தாயே நீ அம்மா, மதம் மாறிடக் கடவுளும் மாறுவார்
நாடு மாறிடக் கொடியும், கீதமும் மாறும்-எல்லாம் மாறினும்
என்றும் மாறாதது தாய் பிள்ளை எனும் தெய்வீகஉறவு

அன்னையே அன்னபூரணி
தேனையும், வானவர் அமுதையும் மிஞ்சிடும்
தீஞ்சுவை அவள் கஞ்சியும், கூழும்

அம்மாவே தெய்வம், அன்னை இல்லமே கோயில்
அம்மாவின் காலடியிலே சொர்க்கம்.
நெஞ்சில் என்றும் நிற்கும் அவள் நினைவே
நான் நோற்கும் பெருநோன்பு

உலகப் பேரழகிகள் மத்தியில் என் வாழ்நாள் பேரழகி-என் தாய்
அவள் இதயப்பேரழகுக்கு-இன்றும் நிகரான அழகி யாருமில்லை
தந்தை முகம் அறியாத பிஞ்சுகளுக்கு
அன்னையும். பிதாவுமான அம்மையப்பன் என் தாய்
தெய்வத் தாய்களுக்கு நோபல் பரிசுகள் எதற்கு?
பிள்ளைகளின் உள்ளக் கமலமே உத்தமியாள் வேண்டுவது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29-08-2023*

# அன்னை

---



காதல் நிலாக்கள் வந்து –வளர்ந்து
தேய்ந்து மறைந்து போகும் வானில்-என்றும்
தேயாத தேன்நிலவும் -மாறாத பௌர்ணமியும்
என் இதயத்தில் இன்றும் நீ அம்மா



காலைக் கதிராய்த் தாய் மலர்ந்திருக்க-
பூத்த புத்தம் புது மலர்களாய் ஆறு பிள்ளைகள் நாம்
அன்னையை சூழ்ந்து அரைவட்டமாய் அமர்ந்திருக்க
அன்னை பிசைந்தூட்டும்-அறுசுவை அன்னமோ
தேனாய், தெள்ளமுதாய் இனிக்கும்

எம் முகம் மலர்ந்த களிப்பை அறுசுவையிலும் பெருஞ்சுவை
என அன்னையின் நெஞ்சம் உண்டு சுவைத்திட
நிலாச்சோறுண்ட நாட்கள் இன்றும் நெஞ்சில்-பழாச்சுளைபோல
மணமும், சுவையும் குன்றாது நிலைத்திருக்க
விழிகளில் துளிர்க்கும் கண்ணீர்-மொழிகளில் பிறக்கும் விம்மல்

நீயில்லா வீடு நிலவில்லாத வானாய்
மலரில்லாத வனமாய் வெறிச்சோடிக்கிடக்க
என் விழிகளிலோ கண்ணீர்மழை
நெஞ்சினிலோ விழிக்கும் சோக எரிமலை

வாடிய பூவாய் தாய் படுத்திருக்க-ஏற்றிய
சுடரும் காற்றில் ஆடி அணைத்திடத் துடித்திருக்க
கயிறறுந்த பட்டமாய் அல்லாடும் மனம்
தாயைத் தேடும் கன்றாய்க் கதறும் தினம்

தூளியிலும், தொட்டிலிலும் ஆடி
உன் தோளிலும் மடியிலும் தூங்கி மகிழ்ந்தவன்
வாடி நீ உறங்கிடக் கண்டு தாயே ஆடிப்போனேன்
ஆண்டவனைக் கூவியும் நீ எழவில்லை
அம்மா, அம்மா என கதறியும் நீ விழிக்கவில்லை

கண்ணில் நீர் வடிய, நெஞ்சில் சோக நெருப்பெரிய
அம்மா, அம்மா என்று கதறி நின்றேன்
விண்ணும், மண்ணும் இருண்டிட-என்
விடியலும் தாயே உன்னோடு மறைந்ததே

நெஞ்சமும் பாலைவனமாய் நொடிக்குள் மாறிட
என் சொர்கமும் போனதம்மா உன்னோடு
தாய் எனும் சொந்தமும் போனதே இன்றோடு

அன்பின் ஆலமரமாய் நின்றவளே-
என் சரணாலயமும், புகலிடமும் ஆனவளே
தள்ளாத வயதில் உன்னைத் தாங்கிட
சிறு விழுதாய் எனக்கு வரமளித்த தெய்வமே நீ

நெஞ்சமெல்லாம் தேனருவி பாய-உள்ளமும் நொடிக்கு
நூறு தடவைஅம்மா, அம்மா என்றே கரைந்து கவிபாட
என் மகளாய் நீ -உன் தாயாய் நான் மாறிட
வரம் தந்து என் வாழ்விற்குப் பொருள் கொடுத்த
தெய்வம் விண்ணேகிட
என் இதயக்கோயில் இருண்டுபோனது

என் மனம் நிறைந்த மகிழ்வும் நீயாக
என் கனவும், கவிதையும் உனதாக
உன் காலடியில் என் சொர்க்கமடி-இன்றோ
உன் கல்லறையில் என் கண்ணீர்ப் பூக்கள் ?

என் உறவும் உன்னோடு போயிட
என் மகிழ்வும் கலைந்த கனவாய் மாறிட
என் உலகும் இருண்ட கானகமாயிட-அம்மா
உன் பிரிவும் எனக்கு நரகாய் போனதே

அம்மா என்று வாய் இனித்து மணக்க
நெஞ்சு குளிர அழைத்த சொல்லும் சொந்தமும்,
மகனே என்று மனம் குளிரக் கேட்ட தாய்மொழியும்
ஊமையாய் போனதே உன்னோடு மறைந்ததே தாயே

அநாதையாய் தவிக்கும் என் இதயம்
மறுமையில் நீ மகிழ்ந்து வாழக் கரைந்தே
கண்ணீரில் கவிபாடும் - நிதம்
கடவுளை வேண்டி நலம் வாழத் தவம் புரியும்.

***தாயோ பெருவரம் – தாய்மையோ பெருந் தவம்.***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-08-2023

# அண்ணா-17.5.2000

என் விழியிரண்டில் கங்கையின் பெருக்கெடுப்பு
விம்மியழும் மனதினிலோ எரிமலையின் புத்துயிர்ப்பு
என் சுவாசக்காற்றினிலோ அக்கினியின் கொடுந்தகிப்பு
என் ஆன்மாவிலோ- சோகத்தின் புது விதைப்பு



என் பொன்வானத்து வெண்நிலவு
புழுதியில் வீழ்ந்ததுமேனோ?
என் இன்பவனத்து கலாபமயிலை
குண்டுகள் சாய்த்ததுமேனோ?

விடியாத பொழுகளாய் நாட்கள் செல்ல-
நினைவில், சோகநிலாவின் அமைதி ஊர்வலம்
என் ஈரவிழிகளிலோ பாலையின் வரட்சி
என் இதயகீதத்திலோ சோகத்தின் கொடிய ஆட்சி



புண்ணில் விழும் அமிலத்துளிகளாய்-நெஞ்சில்
விழுந்து நினைவைச் சிதைத்திடும் பிரிவுச்சோகம்
வெறுமையை மொய்க்கும் ஈர விழிகளில்
காகிதப் பூக்களை மொய்த்திட்ட தேனிக்களின் அவலம்.

மனமெங்கும் சோகச்சிலந்தியின்
கொடிய வலைப்பின்னல்
சிக்கி மடிந்தது, சிந்தை நிறைந்த
அண்ணா எனும் ஆனந்த உறவு

இடிதாங்கி இல்லாத இதயத்தில் இன்றோர் பேரிடி
சுமைதாங்கியல்லாத இதயம் சுக்கு நூறாகிட
நெஞ்சைத் தாக்கிய இமயச் சோகம்

சிந்தை எங்கும் சோக நெருப்பெரிய சிவந்த விழிகளிலோ
கங்கை பெருக்கெடுக்க, அங்கம் அனலிடை மெழுகாய் உருக
எங்கள் இமயம் சாய்ந்ததுமேனோ?-எங்கள்
கதிரவனைக் காரிருள் மூடியதுமேனோ?

மொட்டொன்று முழுதாய் விரியுமுன்
சட்டென்று  வாடிப்போனதிங்கு-
புதுப் பாட்டொன்று பாடுமுன்-புள்ளிக்
குயிலொன்று குண்டடிபட்டு வீழ்ந்ததிங்கு.

சாவே உனக்கென்ன சந்தோஷம்?- தாயும், குஞ்சுகளும்
கதறியழத் தந்தையும் கணவனுமானவன் உயிரைப்
பறித்ததேனோ? நோயும், பேயும் தொடாதவரை-விதியே
நீயும் வெடிகுண்டால் வீழ்த்தியதுமேனோ?

விதியின் கொடிய விளையாட்டில் -இன்றோர்
கோரப்பலி, வீழ்ந்தது மண்பொம்மையல்ல,
மகன்-கணவன்-தந்தை-நண்பன்
அண்ணண்- தம்பி-என நீளும் அன்புறவு

மனிதம் ஒன்று விழுந்தது மண்ணில்-புகழிடம் தேடி
போனதோ விண்ணில், கண்களில் நீர் எழுதி,
காங்கையை நெஞ்சில் வைத்துப் புலம்பிடும்
தாய், அன்னை மனைவி சொந்தங்களோ மண்ணில்

அண்ணா, என் இனிய சொந்தமே , ஊனோடும்,
உணர்வோடும், உதிரத்தோடும் கலந்த அன்புறவே,
பிறர் உயிர் காக்க உன்னுயிர் கொடுத்தே இறைமகனாய்
வாழும் உன் புகழ் என்றும் மங்காது ஐயா

எம் நெஞ்சில் உன் நினைவிருக்கும் வரை-மரணம்
உனக்கில்லை-வரமாய் உன்னைத் தந்த இறைவனுக்கு
தவமாய் உயிரை அளித்துப்-புனிதனாய் வாழும்
உன்னை எம் நெஞ்சம் ஒரு போதும் மறவாது.

***அண்ணா நீ வாழி!***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11.04.2023

# அண்ணா

---



குண்டடிபட்டு வீழ்ந்த மகன்
புண்பட்ட உடலை மடியில் கிடத்தி
என் மகனே என் தலை மகனே
எனத் தாய் அழுதாள்



பொன்மாங்கல்யம் பெற்ற மனைவியும்
அத்தான் அத்தான் என்றே
கண்ணீர் சிந்தி கதறித் துடித்தாள்

மன்னவன் பெற்ற செல்வங்களோ
மடிந்த தந்தையைக் கட்டி அழுது
அப்பா என அழைக்க-இனி
யாருண்டென்றே சொல்லி அழுதார்



உடன் பிறந்த உறவுகளோ
அண்ணா! அண்ணா! எனக் கதறி
-மனம் நொந்து,
சோகத் தீயில் வெந்தார்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-5-2023

# அன்னையும் பிதாவுமாகி

---





அன்னையும், தந்தையுமாகி,
ஆசானும், தெய்வமுமாகி- அன்பினால்
என்னை இன்புறவைத்த அன்புத்தேனே,
என் இன்பத்தாயே வணக்கம்

தாயாய் உனைப் பெறத் தவமேதும் புரியவில்லை
சேயாய் என்னைத் தாலாட்டிய-தாய்மையோ
இறை தந்த வரம் அம்மா

என் உயிர்க் காற்றே, உள்ளோடும் குருதியே
விரிகடல் அலை நடை மறந்தாலும்
வீசு தென்றல் ஓய்ந்து போனாலும்-என் இதயம்
ஒரு போதும் உன்னை மறவாது தாயே

கண்ணுக்குள்ளும்-என் இன்பக்
கனவுக்குள்ளும்-என்றும் நீதானம்மா
மண்ணில் என்னை விதைத்தாலும் முளைத்தே
என்னிதயம் உன் பூமடி தேடும்,

விண்ணில் என் உயிர் கலந்தாலும்
நெஞ்சுக்குள் உன் நினைவு தேனாய் இனிக்க
தெய்வமே, உன் காலடி வந்து சேரும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14-04-2023

# அன்பே லைக்கா-4

---

நினைக்குந்தோறும் நினைவில் பூ மணக்கும்
அணைக்குந்தோறும் மேனி களிப்பால் புல்லரிக்கும்
அன்பைச் சுவைக்குந் தோறும் நெஞ்சில் தேன் சுரக்கும்-
அன்பே லைக்கா இன்றோ உன் பிரிவைத் தாங்காது
அனலில் விழுந்த புழுவாய்த் துடிக்கும் என் இதயம்



விழிக்குளத்தில் நீர் மலர்கள் பூத்திருக்க
விம்மிடும் நெஞ்சில் சோக எரிமலை விழித்திருக்க
கனத்திடும் இதயமோ பாலையாய் தகித்திருக்க
உன்னை பிரிந்து ஒற்றை குயிலாய் புலம்பும் நெஞ்சம்



மந்தமாருதமாய் என் உயிர் மூச்சில் கலந்த உறவே
என் வாழ்வில் இன்று ஏன் இந்தச் சோகச் சண்டமாருதம்
அமுதாய் என் வாழ்வில் இனித்த உறவே
என் வாழ்வில் ஏனிந்தக் கொடிய ஆலகாலம்

மானே, நீ போனபின் என் இதயப் பூவனம் காடானது
தேனே, நீ மறைந்த பின் என் நெஞ்சம் வாடிய பூவானது
வான்மதியே, நீயின்றி என் வானம் இருளானது
பூபாளமே, உன் பிரிவால் முகாரியே என் இதயராகமானது

நீர் சிந்தி விழிகள் நிறம்மாறிச் சிவந்திட-கார்மேகக்
கொடை காணா நிலம்போல் மனம் காய்ந்து வெடித்திட
நொந்த இதயம் -தந்தியறுந்த வீணையாய் அழுதிட
சுனாமிபோல் தாக்கிய உன் பிரிவு

தெருமுனையில் என் காலடி ஓசை கேட்டு-வீட்டுக்குள்ளே
அன்னையைச் சுற்றி வந்து உன் களிநடனம்-வாயிற் கதவைத்
திறக்க முன்னங்கால்களால் கட்டியணைத்து-முத்தமழை
பொழிந்து அன்பைச் சொல்லும் ஆனந்த நர்த்தனம்

அன்னைக்கு கேட்காத என் காலடிகள்
உன் அன்புச் செவிகளுக்கு கேட்ட இன்ப நாயனம்
அன்னைக்கு என் வரவைச் சொல்ல-
வீட்டுக்குள் உன் ஆனந்த நர்த்தனம

அன்பைச் சொல்ல என்னைக் கட்டியணைத்து
உன் இன்ப ஆலிங்கனம்-இன்றோ
பிரிவைச் சொல்ல என் விழிகளிலோ
கண்ணீர் பூக்களின் ஊர்வலம்

உள்ளம் நெகிழ, உருகி விழிகள் நீர் சிந்த
அன்பு உறவும் கலைந்த இன்பக் கனவானது
வான் நோக்கிய ஈர விழிகள்-இறைவா
நீ தந்தாய், நீ எடுத்தாய்
எல்லாப் புகழும் உனக்கே ஜெபமானது

ஒரு நாள் ஓசையின்றிக் கதவைத் திறந்து-வீட்டைச்
சோதனையிட வந்த விசேட அதிரடிப் படை-முன்னங்
கால்களால் தழுவி முத்தமிட்டு அன்பைச் சொன்ன லைக்கா
சத்தம் கேட்டு நான் வெளியே வந்த எனக்கு ஆச்சரியம்

உங்கள் நாயின் அன்பு -உங்கள் நல் உள்ளத்திற்கு சாட்சி
வீட்டைச் சோதனையிடத் தேவையே இல்லை
அன்போடு கூறி-லைக்காவைத் தடவி
விடைபெற்ற விசேட அதிரடிப் படை அதிகாரி

வானூரும் நிலவும், தேனூரும் மலர்களும்
கரை வந்து மோதும் அலை கடலும் சாட்சியாக
என்னுயிர் இருக்கும் வரை-என் இதயம்-அன்பே
உன்னை ஒரு போதும் மறவாது

நண்பா நாயல்ல நீ -என்னை நேசித்த
இன்னோர் தாய் நீ- தன் அன்னை என்னோடு பகிர
அன்பு இறைவன் தந்த பெருங்கொடை நீ

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-17-04-2023

# அப்பாவும் நானும்

---

மலர்ந்தும் மலராத பாதிமலரான என்னை
மகிழ்ந்து கொண்டாடிய என் தந்தையே
மரணம் பிரிந்தாலும்-மறவாத நினைவுகள்-இன்றும்
பசுமையாய் என் உள்ளத்தில்



அகவை அறுபது ஆகியும் கலையாத கனவாய்-
எல்லோரா ஓவியமாய் நெஞ்சில் உங்கள் நினைவுகள் ஐயா
குழந்தை என்னைக் குளிப்பாட்டி மாற்று உடை எடுக்கச்
அன்னை செல்ல, செல்லமாய் என்னைக் களவாடி
தூவாலையால் மூடித் தோள் சுமந்து



கடைத் தெருவிற்கு சென்று தயிர் வாங்கி வந்தோம்

என்னைக் காணாது தேடி பதறித் துடித்த தாய்
எம்மை கண்டதும் பொய்கோபத்துடன்
உங்களை கடிய என்னே ஆனந்தம்.

மகிழ்வோடு மடியில் நானிருக்க-''ரேகடியில்''
ஆற்று மீன்களுக்கு பிஸ்கட் போட-ஓடி வரும் மீன்கள்
கண்டு உவகையால் நான் குலுங்கிச் சிரிக்க
உங்கள் முகத்தில்தான் என்னே ஆனந்தம்.

ஓர் இரவில் தூக்கம் கலைந்து நான் கண்விழிக்க
அன்னையோடு நீங்கள் கதைபேசி மகிழக்கண்டு
காட்டு கரடி தேன்குடிக்கும்
எங்கள் வீட்டுக்கரடி மது குடிக்கும்

மழலையில் நான் மொழிந்து சிரிக்க
என் சிரிப்பை இரசித்து வெட்கப்பட்டு
என் குழந்தைக்கு என்னே அறிவு என வியந்த
உங்கள் புன்னகை இன்றும் என் நெஞ்சில்.

என் முகத்தில் விழித்தால் அதிஷ்டம் என்றே
நாளும் வேலைக்குச் செல்கையில்
என்னைத் தூக்கிய படி அன்னை வாயிலில் நிற்க
என் முகம் பார்த்து வேலைக்கு செல்லும்
வெற்றி வீரர் நீங்கள்

ஒரு நாள்-அந்த இருண்ட நாள், விழி திறக்க நான் மறுக்க
அன்னை என்னை கெஞ்சிக் களைக்க-
குழந்தையை வையாதே எனச் சொல்லி முத்தமிட்டு
என் விழி காணாது போனவர்-இரவு
மூடிய விழிகளோடு பிணமாய் வந்த கோலம்
உன் முகம் காணாது நான் தவித்த காலம்
இருண்ட சோகக் காலமானதே அப்பா

ஆறு பிள்ளைகளின் ஆனந்தமும்
அன்னையின் புன்சிரிப்பும் காற்றோடு கலந்து
ஆற்றோடு மூழ்கிப்போனதே ஐயா.

நினைவுகளில் ஆயிரம் வலி , நினைத்துப் பார்க்கையில்-
இன்றும் துடிக்கும் இதயத்திலும் சுள்ளென்ற வலி
விழிகளிலே ஈரம் துளிர்க-மொழிகளும் தடுமாறித் தவிக்க
அப்பா என்றழைத்த உறவு, அரிய கனவானதே-பழங்கதையானதே

அப்பா என்றழைக்க எனக்கு யாருமில்லை
இறைவனே தந்தையான நிலை-இறைவனை
அப்பா என்றழைக்கவோ, நம்மைப் பிரித்தார்
உம்மைத் தம்மிடம் அழைத்தார்
எனக்கு புரியவில்லை இன்னமும்
நான் உந்தன் சிறுபிள்ளை.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29-08-2023*

# அத்தான்- அழியாத கோலம்

அக்கையின் கைத்தலம் பற்றி
அன்னையை வணங்கிடும் தந்தைாய்
வந்த அத்தான் எனும் அன்புறவு-
அண்ணனாய் மாறிய உன்னத நிகழ்வு





அள்ளிக் கொடுக்கும் வள்ளல் மனம்
அக்கையின் தம்பிளைத் தன் தம்பிகளாய்
போற்றி விருந்தோம்பும் உயரிய குணம்
பாசமனதில் என்றும் நேச மணம்

மின்சாரம் இல்லாத வீட்டில் மின்சாரம்,
வானொலி, தொலைக் காட்சி,
தொலைபேசி என நவீன வசதிகள்
தம்பி எனப் பாசத்தின் அழைப்புக்கள்

காலவெள்ளத்தில பிள்ளைகளுக்காய்
ஓலைக் குடிசையில் அழகிய வீடுகள்
எம் துன்பத்தை பகிர்ந்து
விருந்தோம்பிய பல் ஆண்டுகள்



கடின உழைப்பாளி, அந்தோனியார் பக்தரோ
அள்ளிக் கொடுக்கும் பரோபகாரி, காலவெள்ளத்தில்
மரணத்தின் அழைப்பு கலங்கிய மனதில்
எல்லாம் அவன் செயல் என்ற ஏற்பில் பணிவு

இறை தந்த அன்புறவு, எம் இதயங்களில்
காலமெல்லாம் அன்பு மழை பொழிந்த
அழகிய உறவு, இதயத்தில் இன்றும் நிலைத்த
அன்பின் அழியாத கோலம்- ராசா அத்தான்

கம்பீரமான தோற்றம், அக்கை,
பிள்ளைகள் மேல் அளவில்லாத பாசம்
தாயின் ஒரே மகன், எம் தாயை
தன் தாயாய் நேசித்த தலை மகன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-1-2024

# என் உலகம்



ஊருக்கு என் அன்னையோ ஒரு பெண்
அன்பு மகனுக்கு அன்னையோ உலகம்
நூற்காத தவத்திற்கு தெய்வம் தந்த வரம்
தாயோ தெய்வத்தின் உருவம்



எமக்காய்த் தன்னை எரித்த தீபம்
உறக்கம் கலைய பூபாளம் பாடும் புள்ளினம்,
இதயம் மலர தினம் முகம் காட்டும் புது உதயம்
வாழுங் கலையை வாழ்வால் விளக்கிய நூலகம்

பிள்ளைகளே தன் உலகம் என்று
என்றும் பூபாளம் பாடும் தாயுள்ளம்
அள்ளிப் பொழிந்த அன்பில்
அம்மாவே தெய்வம் நிதரிசனம்

மும்மகளும் ஒன்றான அம்மை
வாழ்வை எமக்காய் ஆகுதியாக்கிய தாய்மை
கண் மறைந்தும் நெஞ்சம் மறவாத அன்பின் மேன்மை
அம்மாவே தெய்வம் நானறிந்த உண்மை

அன்னையிலே அன்பு இறைவனின் பிரசன்னம்
நாளும், பொழுதும் எம்மை வழிநடத்தும்
கரிசனம், தாயே உலகில் தெய்வம் நிதரிசனம்
தூய மனத்தவருக்கு அன்பின் தரிசனம்

**இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-1-2024

# இதயக் கமலம்

---

***என் இதயக்கமலத்தில்-இனிக்கும்***
***நினைவாய் இன்றும் என்றும் என் அம்மா.***

செல்லுமிடம் சொல்லி, அம்மா போய் வருகிறேன்-
சொல்ல, புன்னகையால் ஆசீர்வழுங்கும் அன்னை
இல்லம் திரும்பியவுடன் வந்துவிட்டேன் என்று சொல்ல
கண்ணகையால் கட்டித் தழுவிடும் தாய்மை



துாரப் பயணங்களில் கட்டி அணைத்து-நெற்றியில் முத்தமிட்டு
ஆசீர்வழங்கி இறைவனை வேண்டிடும் அம்மை
உறக்கத்திலும் என்னை அணைத்துக் காக்க
சேலையுருவில் போர்வையாகும் தாய்மை
அன்னையின் வாசத்தில்-அணையாத நேசத்தில்
கைக்குழந்தையாகும் மேன்மை



அதிகாலைப் பொழுதில்-அன்னை இல்லத்தில்
சுப்பிரபாதமாய் தட்டி எழுப்பிடும் தாய்மை
சூடான தேனீர் தந்து, தலைக்கு எண்ணெய் வைத்து
படிக்கச் சொல்லும் தாயோ கலைவாணியான அம்மை

ஒரு பாயில் உறங்கி-ஓராயிரம் கதைபேசி
கதை, கவிதை, நாடகம், இலக்கியம்,
நன்னுால் எனப் பட்டி மன்றங்கள் நடத்தி
என் அறிவுச் சுடரைத் துாண்டிடும் காயத்திரி மந்திரம்

அயராத உழைப்பில் அன்னையோ திருமகள்
தந்தை இல்லாப் பிள்ளைகளை, காத்து, வளர்த்து
ஆளாக்கிய வீரத்தில் மலைமகள்-எண்ணிட
மனம் வியக்கும் பொழுதுகள்-எண்ணிலடங்காது
அவள் தியாகங்கள்-எமக்காய் எரிந்த ஞான தீபம்-
எமக்காய் நுாற்ற வாழ்வோ தவம்

தாயின் மடியில் தலை வைத்துப் படுத்திட தீராத நோயும்
தீர்ந்திடும், மாறாத சோகமும் மறைந்திடும்
நோயுற்று வாட-நொந்தழுதவள் சேயுற்ற நோய் தீர
தெய்வத்தை தொழுதே-தனியாய்
என்னைத் தேற்ற மலையகம் வந்தவள்

நித்தம் தாய் முகம் காணாமல்-சேயும் வாட
பசுமை பூத்த மலையகத்திலும்,
பாலையிலும் கழித்த நாட்கள்-ஏதேன் தோட்டத்தை
ஆதாம் துறந்த காலங்கள்.

பாற்சோறும், பால், பழமிட்டுப் பிசைந்த பழஞ்சோறும்
அமுதாக- ஆறாம் சுவை தாண்டிய ஆயிரம் சுவைகள்
அம்மாவின் அமுதிலும் இனிய விருந்துகள்

தாயின் புன்னகை- தவமின்றி கிடைக்கும் வரமாக
அன்னையின் அணைப்பு-துயர் நீக்கிடும் சஞ்சீவினியாக
எந்நாளும் ஒளிமாயமான காலங்கள்.

தந்தையிழந்த நிலையிலும்- தனியனான அம்மை
அம்மையப்பனாய் நின்ற இருமை
முக்குணம் கடந்த மேன்மை தாய்மை
அன்பின் வேதமாய் அவள் பெண்மை

ஐம்பெரும் ஆற்றல்களும் அடங்கிய பேராற்றலாய் அவள்
ஆறாம் அறிவு தாண்டிய அற்புதமாய் அவள் ஞானம்
அறு சுவையிலும் இனிது அவள் படைக்கும் அமுது
ஏழ் ஸ்வரங்களிலும் பெரிது தாயின் பொன்மொழிகள்

எண் திசைகளிலும் பெரிது அணைக்கும் கரங்கள்
நவரத்தினங்களிலும் அரிது அவள் குணங்கள்
தச அவதாரங்களிலும் உயர்வு எம்மைக் காக்க-
கைம்மை எடுத்த அவதாரங்கள்

நான் அறிந்த தெய்வங்களில்-தெய்வமாய்
கண்டதும் என் அன்னை
கரைந்து நெஞ்சம் நெகிழ-அறிந்ததும்
அன்பிறைவனே தாய் வடிவான உண்மை

என்னை ஈர்க்கும் அன்பின் காந்தப் புலமும்
என்னை விழாது காத்து
விழா எடுக்கும் புவியீர்ப்புமாய் அவள்

கருவிலும் தன்னோடு கட்டிக்காத்த தொப்புள் கொடி
உருவாகி வளாந்தபோதும் மகனே என்றழைக்கும்
***பாசக்கொடி,*** அன்பே வாழ்வால் சொன்ன கீதை-
தியாகமே அவள் ஏற்றிய தீபம்

அரசாய் நின்று நிழல் தந்த தாய்மை
விழும்போதெல்லாம் ஆலாய்
மடியில் தாங்கிய அம்மை

தீபமாய் தன்னை எரித்த மெழுகுதிரி
தூபமாய் என்னில் உலவும் சுவாசக்காற்று
உயிராய் என்னில் கலந்த உறவு உறங்காது என்னை
இன்றும் காக்கும் தெய்வீக நினைவு-அம்மா

அன்னையாய் உன்னைப்பெற-தாயே
அருந்தவம் நான் செய்யவில்லை
உன் மகனாய் பிறந்ததோ-அம்மா
நீ தந்த வரம்தான்

கம்பனும் எழுதாத கவிதை தாயின் மொழி
முப்பாலும் கடந்த தெய்வீகப் பால் தாய்ப்பால்
வள்ளுவன் சொல்லாத அறம் தாயின் நெறி
கீதையிலும் காணாத தெய்வீக யோகம்-தாய்மை

தியாகமே அவள் யாத்த யாகம்
அன்பே அவள் திருவடிவம்.-அவளோ
வாழ்வெனும் குருஷேத்திரத்தில்-கண்ணன்
கல்வாரிப் பாதையில்-கிறிஸ்து

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-08.2023

# அம்மா– இதயம் எழுதிய காவியம்-(9-2-2011)

---

***இதயத்தை அரிக்கும் சோகக் கறையான்கள்***
***இமைகரையுடைக்கும் கண்ணீர்க் கங்கைகள்***
***சுவாசத்தை சூடாக்கும் பெருமூச்சுக்கள்***
***உயிரையும் மெய்யையும் ஒன்றாய்வதைக்கும்***
***அன்னையின் பிரிவுத்துயரங்கள்***





***என் பேரானந்தத்தின் அஸ்தமனம் இன்று***

தாயெனும் பேரின்பராஜ உறவு -என்னைப்
பிரிந்த துக்கதினம்.
என் விழிகளிலோ நீரருவி-என் நெஞ்சோ
சோகப்பண்ணிசைக்கும் பூங்குருவி

வெறுமைக்குள் என் சிறையிருப்பு
தாயன்பில்லா வறுமைக்குள்-என் மறு பிறப்பு
அநாதையானேன்ஆணிவேரிழந்த மரமுமானேன்.

என் அமைதிப் பூங்காவில்-இன்று ஓர் பேரனர்த்தம்
புயலில் விழுந்தவை ஒருபுறம்
பூகம்பத்தில் சரிந்தவை மறுபுறம்
காட்டுத்தீயில் எரிந்தவையும்
காணமற்போனவையும் நாற்புறம்

தாயென்ற பேரமைதி தவிக்க விட்டுப்போயிட
சோகக் கொடும் புயல் என் நெஞ்சில் வீசிட
ஆணிவேர் அறுந்து, விழுதுகள் முறிந்திட
மண்ணில் சாய்ந்த மரமானேன்

தாயில்லா வாழ்வில்-இனி என்றும் ஏகாந்தமோ?
நீ இல்லா உலகில்-என் வாழ்வு-மண்ணில்
அல்லாடும் நூலறுந்த காற்றாடியோ?
நிலவிழந்த வானாய் ஒளியிழந்தது-என் வாழ்வு
கதிரின்றிக் கண் விழிக்க மறுக்குது உன் மலர்ச்செண்டு

சோகக்கடலில் -என் காகிதக் கப்பல் மூழ்கிட
கோரப்புயலில் -என் வண்ணக்காற்றாடி சிக்கிட
விழிகளிலோ வாடாத கண்ணீர்மாலைகள்
நெஞ்சினிலோ சோகசுனாமியின் பேரலைகள்
இதய வீணையிலோ முகாரியின் ஓயாத ஆலாபனைகள்.

தெய்வமே ஏன் என்னை பிரிந்தாய்?-தேன்நிலவே
ஏன் என் வானின்று மறைந்தாய்?
என்றும், நீ என்னோடிருப்பாய்
என்று நான் எண்ணி மகிழ்ந்திருந்தேன்
ஊனொடுங்க, உயிர்க் காற்றொடுங்க
உயிரொடங்கி நீ மறைந்தாய்

போய் வருவேன் என ஒரு வார்த்தை சொல்லாமல்
என்னையும் கூட்டி செல்லாமல் தனியே போனாயே
நீர் தேடும் கலைமானாய் நா வரண்டு அலைகின்றேன்
நீர் வற்றியகுளத்தில்-வேர்காயும்
தாமரையாய் வெதும்பி வாடுகின்றேன்

செல்லும் திசை தெரியாமல்
கண்ணிழந்த கபோதிபோல் அலைகின்றேன்.
சோகம் சொல்லத் தெரியாமல்
மொழியிழந்த ஊமைபோல் கதறுகிறேன் .

நீ போனபின் என் இதயமோ
பாலையான அவலம்-என் பார்வையிலோ
வெறுமையின் அலங்கோலம்.



சிறு தொண்டனாய்
நின்னடி சேவை செய்ய -தெய்வமே
நீ தந்த வரம் மிகப்பெரிது.

அன்னை என்னும் ஆனந்த உறவு தந்து
அன்பினால்-எனை ஆட்கொண்ட தெய்வமே
உன்னடி தொழுது, உன் முகம் பார்த்த நாட்கள்
என் வாழ்வின் வசந்தங்கள்

உன்னைச் சீராட்டி நீராட்டி-சோறூட்டி
பாலூட்டிப் பணி செய்ய-என்னைத் தாயாக்கி-
எனக்கு நீ மகளானாய்
தெய்வமே நீ ஈந்த வரம் பெரிது

நோயுன்னை வாட்டும்போது-நொந்து-நீ
மொழிந்த செபங்கள் இறையீந்த வரங்கள்.
என் விசுவாசம் நிலைக்க நாட்டிய தூண்கள்
நீ தான் என் இறைதூதன்
நீதான் என் இறைநம்பிக்கை
தாயே என் தெய்வம்

பொற்தொட்டிலில் பிறந்து-பூ மஞ்சத்தில் வளர்ந்து
மலர்ப் பாதையில் நடந்த நீ-
முள்ளில் நடந்து, பாலையில் வாடியபோதும்
பழமுதிர்ச்சோலையாய் மாறி எம்மைக் காத்தாய்

அம்மா எமக்காய் உழைத்து ஓய்ந்த
உன் பொன்னுடலைத் தழுவிச் சோர்கின்றேன்-
எமக்காய் துடித்த உன் இதயத் துடிப்பைக்
கேட்கத் தவிக்கின்றேன்
விழி திறந்து ஒருமொழி சொல்லாயோ?



கண் விழிக்க- காத்திருந்தே தேநீர் தருவாய்-
பசி என்னும் போது பாசத்தோடு விருந்து படைப்பாய்
தாயே உன் கைபடக் கூழும் அமுதானதே
உன் கால் படக் குடிலும் மாளிகையானதே.

இன்று பசி மறந்து, சுவையிழந்து
அழுது புலம்புகின்றேன்
விழி திறந்து ஒரு மொழி சொல்லாமல்
நீ தூங்கிப்போனதென்ன?

நீயிருக்கும்போது என் நெஞ்சினிலோ
வண்ணக் கனவுகளின் குடியிருப்பு
நீ போனபின் தாயே-என் நெஞ்சிலோ
கவலைக் காளான்களின் கொடிய ஆக்கிரமிப்பு

ஏதுமின்றி வந்தவனுக்கு
யாதுமாகி நின்றவளே-இன்று எல்லாமிருந்தும்
நீயின்றி ஏழையானேன்.

விதியே ஏன் புன்னகைப் பூக்களை கொள்ளையிட்டு
கண்ணீர்ப் பூக்களை பரிசளித்தாய்
என் ஆனந்தராகத்தை அபஸீரமாக்கி
முகாரியை அரங்கேற்றினாய்?

இதயம்தான் உனக்காய் ஏங்கித் துடித்திட,
சுவாசம்தான் உயிர்காற்றே -நீயின்றித் திக்குமுக்காடிட,
விழிகள்தான் உன் திருமுகம் காணாமல்
கண்ணீர்ப் பூக்களை உதிர்த்திட
செவிகளும் உன் கனிமொழி கேளாமல் வாடித் தவித்திட
உயிரும் மெய்யும் உன் திருவடி வணங்கிட ஏங்குது
என் தாயே ஏன் என்னைப் பிரிந்தாய்?

நான் பாடிடும் தேவாரமும் நீ திருவாசகமும் நீ
இறைமகன் எனக்கீந்த தாயும் நீ
உன் காலடியில் தாயே-அன்பிறைவன்
என் சொர்க்கத்தை வைத்தான்
சிறு தொண்டனாய் உனக்கு சேவை செய்து
நான் உய்ய தேவ-அழைத்தல் தந்தான்.

அம்மா மூடிய உன் விழிகளுக்குள்
என் மோட்சம் மறைந்ததே
வாடிய உன் உடலோடு
என் வசந்தம் போனதோ?



கானகுயிலே- தேவராகமாய் உன் குரல்
ஒலித்த வீட்டில்-இன்று மௌனராகத்தின் ஆட்சி
பௌர்ணமியாய் நீ உலாவிய வீட்டில் -இன்று
அமவாசையின் மாட்சி?

எரிநெருப்பில் நெஞ்சம் குடியிருக்க
இரு விழிகளில் "நயகரா" பெருக்கெடுக்க
உயிர் மூச்சினிலோ "எட்னா" விழித்திருக்க
தலைசாய்கத் தாய்மடி தேடும் என் இதயம்

அம்மா என் ஆருயிரே- பேரானந்தமே
விழி மூடி நீ உறங்கினாலும்-என் விழிக்குள் நீதானம்மா
கண்மூடி தூங்கினாலும்-என் கனவுக்குள் நீதானம்மா
வாய்மூடி நீ மௌனித்தாலும்-என் தாய்மொழி நீதானம்மா

தாயே என் இன்பத்தமிழே
அறம் பொருள் இன்பமாய் நின்ற பேரழகே
எனக்கோர் "வீடு" தேடி விண்ணகம் சென்றாயோ?
நீ போனபின் தாயே நீயில்லா வீடே என் காடானதே
நிலவில்லா வான் ஆனதே.

உள்ளோடும் குருதியாய் -உயிர்காற்றாய்
என்னில் கலந்த தெய்வீக உறவே,
கயல் விழி மூடிக் கனிமொழி ஓய்ந்திட-மஞ்சத்தில்
மலர்மாலை சூடி மீளர்துயில் கொண்டிட-விண்ணே
என் மீது இடிந்து விழாதோ?
மண்ணே பிளந்து எனை மூடிடாதோ?
எரிமலையே எனைச் சுட்டுத் தீய்க்காதோ
ஏழ்கடலே பொங்கியெழுந்து என்னை மூழ்கடிக்காதோ
என ஏங்கி நின்றேன் கண்ணீரில் மூழ்கி நின்றேன்

எனக்கு உயிர் மெய் ஈந்த தெய்வம் நீ
கல்வி தந்த கலைமகளும் நீ
என் செல்வமாய் நின்ற திருமகளும் நீ
எனக்கு வீரமூட்டிய மலைமகளும் நீ



இதயம்தான் -தாயைத் தேடும் கன்றாய்,
உன்னைத் தேடிக் கதறிட-எண்ணம்தான்
தொடர்பிழந்த செய்மதிபோல்-வெட்ட வெளியில்
உன் உறவின்றித் தவித்திட,
நீ ஊட்டி வளர்த்த மெய்யும்–நீரின்றி
வாடிய பயிராய் பரிதவித்திட,
மெய்யான உன் அன்பும் மறைந்திட
என் வாழ்வு பொய்யாய் கனவாய்க் கலைந்ததே
எல்லாம் மாயையானதே

"அம்மையப்பனாய்" நின்ற -என் உலகே
உனைச் சுற்றி வந்த 'பிள்ளை' எனக்கு
"அன்பு கனியை" சுவைக்க தந்த "தெய்வம்" நீ
எனக்கு ஞான நிழல் தந்த-போதி விருட்சம் நீ
என்றும் நான் சுற்றி வரும்-க.ஃபாவும் நீ

உன் காலடிகளே நான் வணங்கும் திருப்பாதம்
நீ கண்ணயர்ந்த கட்டிலோ-நான் கண்ட கல்வாரி
தாயே நீ வாழ்ந்த இல்லமே-என் திருக்கோயில்
நாளும் உனைத் தொழுவதே-என் திருவழிபாடு.



வாழ்வால் கீதை சொன்ன கிருஷ்ணனும் நீதான்
அறம் பெருள் இன்பமாய் வாழ்ந்து
குறளுக்கு பொருள் சொன்ன-வள்ளுவனும் நீதான்
நான் கண்ட புதுமைப் பெண்ணும் நீதான்

என் வாழ்வின் நம்பிக்கையும் நற்செய்தியும் நீதான்
தாயே -நீ எனக்கு தெய்வம் தந்த பெருங்கொடை
இறைவன் வழங்கிய அருங்கருணை அம்மா

தாயே என் தெய்வமே நீலக்கடலலைகள் ஓய்ந்தாலும்
வானப்பெருவெளியும் சுருங்கி மறைந்தாலும்
வானும் மழைக்கொடை வழங்க மறுத்தாலும்-
என்னிதயம் உன்னை ஒரு போதும் மறவாது.



முப்பாலும் திரிந்த பொருளிழந்தாலும்
“வீடும்” பாழடைந்து காடானாலும்
ஏழ்கடலும் வற்றித் தரையானாலும்
அன்பால் கனிந்த என் அன்னையே
என் சித்தம் நினைப்பு செய்கை உள்ளளவும்
என்னிதயம் உனை ஒரு போதும் மறவாது

அம்மா-கங்கை காய்ந்தாலும்-திங்கள் தீய்ந்தாலும்
செவ்வாயும் திசைமாறிப் போனாலும்
என்னிதயம் உனை ஒருபோதும் மறவாது

அன்னையே –ஆரமுதே-என் ஆனந்த தேனே
எனைச் சூழ்ந்த விண்ணே-உன் வாழ்வு
எனக்கு ஆனந்த வியப்பு

அகங்காரமழிந்து-ஐம்புலனுமொடுங்கி
ஆத்ம ஜோதி பிரகாசிக்க-அன்னையே
நீ என் அழகுமகளாய் பிறக்கக் கண்டே
ஆனந்த பேருவகை கொண்டேன்.

*பிறவாமை வேண்டும்-தாயே*
*மீண்டும் பிறப்புண்டேல்*
*நின் மகனாய் என்றும் பிறக்க*
*அருள் வரம் வேண்டும்*

*நுாறங்காத தவத்திற்கு, இறைவா*
*நீ தந்த வரம் பெரிது-தந்தையே*
*எல்லாப் புகழும் உனக்கே*

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-04-2023

# கலைந்த குங்குமம்–அப்பா

---

**கார்த்திகை** -19-1960, மயக்கும் மாலைப் பொழுதும்
இனிக்கும் இன்ப இரவும் கலந்திடும் நேரம்

ஆற்றிலே புதுவெள்ளம் ஆர்ப்பரித்து ஓடிட
ஆரத்தழுவிய ஊதல் காற்று கூதல் சொல்லிட
அப்பாவின் நீச்சலைப் பார்த்து இரசிக்கப் போன
அண்ணன் தம்பிகள் வயதோ பன்னிரண்டும், பத்தும்



கம்பீரமாய்த் தந்தை நடந்துவர, கைகளைப்
பிடித்துக் கதைபேசி நடந்த பிள்ளைகள் நெஞ்சிலே
புதுவெள்ளமாய்ப் பொங்கிடும் பேரானந்தம்

ஆற்றை நீந்திக்கடக்கும் சாதனை-பலருக்கும்
அச்சத்தை உண்டு பண்ணும் மரண சோதனை
நீச்சலோ அப்பாவிற்கு பிடித்த விளையாட்டு
எதிர்நீச்சலோ வாழ்வில் கிடைத்த பாராட்டு

அற்றிலே வெள்ளம் அலைபாய அஞ்சிய தம்பி
"அப்பா வெள்ளம் பாயுது, பார்க்கப் பயமாயிருக்குது,
இன்று வேண்டாம் இன்னொரு நாள் நீந்தலாம்"
கெஞ்சிய அண்ணன்

மகனின் மொழிகேட்டு புன்னகைத்த தந்தை
"அஞ்சினால் எதையும் சாதிக்க முடியாது
அச்சமே தடை, இப்போது பார் அப்பா நீந்துவதை
கோழையாய் வாழ்வதை விட வீரனாய் சாவதுமேல்"-
புன்னகையோடு சொல்லி-அன்போடு
பொன்னகையெனப் பிள்ளைகளை அணைத்த தந்தை

வாலாமணியை கழற்றிக் கொடுத்துவிட்டு
வேட்டியை வரிந்து கட்டிக்கொண்டு-"பிள்ளைகளே
அக்கரைக்குச் செல்லுங்கள்-எதிர்கரையில் தெரியும்
வாகை மரத்தடிக்கு -அப்பா வந்துவிடுவேன்"

கைகளை அசைத்து விடை கூறித் தொப்பென நீரில் குதித்தவர்
மீனாய் நீந்திட, நீச்சல் வீரனுக்கு பாய்ச்சல் காட்டிப்
புதுவெள்ளம் பொங்கிப் பாய்ந்தோட-துணிவோடு குதித்தவர்
மகிழ்வோடு நீந்திட அஞ்சாத நெஞ்சிலே ஆனந்தம்.

அச்சமும், மகிழ்ச்சியும் ஆட்கொள்ள, ஓட்டமும்
நடையுமாய் அண்ணன் தம்பி இருவரும்
பாலத்தைக் கடந்து மரத்தடி நோக்கி
வீரத்தந்தையை வரவேற்க ஓடிய நேரம்.

ஆற்றங்கரை வாகை மரத்தடி அருகே மாடுகள் குளிப்பாட்டித்
தோன்றிய பெருங்குழி, சேறு நிறைந்து புதைமணலாய்
எமலோக வாயிலாய் மாறிய கொடுங்கோலம், புதுவெள்ளம்
பாயந்தோட, எமனோ குழியில் மறைந்திருந்த அலங்கோலம்.

விழிப்போடு மீனாய் நீந்தியவர் கரை தெரியக்
களிப்போடு கரைநோக்கி நடக்க, குழியிலே புதைந்த கால்கள்
ஆள்விழுங்கிச் சேறு கீழ் நோக்கி கால்களை இழுக்க
அவிழ்ந்த வேட்டியில் சிக்கிய பாதங்கள்

எடுத்த அடியெல்லாம் உடலை உள்ளே இழுத்திட
கால்களை மீட்க தொடங்கிய போராட்டம்-காலனுக்குக்
கொண்டாட்டமாய் மாறிட, ஆழப்புதைய அச்சம் ஆட்கொள்ள
கதறிறினார் ''காப்பாற்றுங்கள், என்னைக் காப்பாற்றுங்கள்''

ஓட்டமும் நடையுமாய் வந்த சகோதரர்-தந்தையின்
கதறலை கேட்டு கண்ணீரோடு கதறினார்கள்
''அப்பாவைக் காப்பாற்றுங்கள்-ஐயோ
எங்கள் அப்பாவை காப்பாற்றுங்கள்''

கண்ணீரில் குரல் கரைய-தந்தை பிள்ளைகளின்
கதறல் பரிதாபமாய் எங்கும் எதிரொலிக்க
உள்ளம் துடிக்க-வான் சிந்திய கண்ணீராய்
ஆற்றில் பெருக்கெடுத்தோடிய வெள்ளம்

நீர் மேல் தெரிந்த இரு கரங்கள் மெல்ல மெல்ல மூழ்கிட
போய் வருகிறேன் பிள்ளைகளே பத்திரம் சொல்லாமல் சொல்லி
விடைபெற-வாட்டிடும் சோகம் நெஞ்சை நெருப்பாய் எரித்திட
-அப்பா'' ''அப்பா'' எனக் கதறும் பிள்ளைகளின் அவலக்குரல்
மெல்ல மெல்ல நீரில் மூழ்கும் தந்தையின் திருவுடல்

நீர் மேல் தெரிந்த கரங்கள் -நீரில் மெல்ல மூழ்கி மறைந்திட
நீரில் மூழ்கிய விழிகள்-நீச்சல் தெரியாது தவித்திட
ஆற்றில் சென்ற தோணிக்காரரும் -தந்தைக்கு உதவிட
அஞ்சிட, அகாலமாய்த் துஞ்சிய இளந் தந்தை

சேற்றில் புதையுண்ட தந்தையை-கண்ணெதிரில்
காலன் களவாடிச் செல்ல-சாட்சிகளாய்
கண்ணீரில் மூழ்கிக் கதறி நின்ற பிள்ளைகள்-
முற்றும் முடிந்ததென்ற அவல நிலைகள்

'அப்பா' என்ற இரத்த உறவும் நீருக்குள் அடங்கிட
' அப்பா என்ற சொல்லும்' அழுகையோடு ஓய்ந்திட-இனி
"அப்பா" என்றழைக்க அரிய உறவில்லை
அழுகையைத் துடைத்து, ஆறுதல் மொழிய
அன்னையைத் தவிர வேறு உறவில்லை

குளித்துக் கூந்தலை துடைத்து கோதிவிட்டு
மங்கலமாய்க் குங்குமம் தரிக்க –மாதா எடுத்த
குங்குமச் சிமிழ் கைநழுவிட
தரையில் சிந்திச் சிதறிய குங்குமம்

நெஞ்சுக் குழியில் ஏதோ பொறுத்திட, நினவுகளை
அறியாத சோகம் கவ்விட, அஞ்சிட ஏதோ நடந்ததென
அஞ்சன விழிகளில் நீர் பொங்கிட, விம்மிய நெஞ்சம்
இயேசுவை இரு கரம் கூப்பித் தொழுதிட
ஏற்றிய தீபம் காற்றில் ஆடிப் பட்டென அணைந்திட
விக்கித்து நின்ற அன்னை.

"அம்மா", "அம்மா" எனக் கூவிக் கேவி
ஓடி வந்த பிள்ளைகளை வாரி அணைத்த அன்னை
கேவிக்கதறி குழந்தைகள் கூறிய சேதியால்
வெட்டிய மரம்போல் மயங்கி தரையில் வீழ்ந்த அம்மை

ஆடிப், பாடி அப்பாவோடு போனவர்கள்
அழுது புலம்பி தனியே வந்தார்கள்-தந்தையின்
கைத்தலம் பற்றி நடந்தவர்கள்-தாயின், மடியிலும்
மார்பிலும் வாடிய மலராய்க் கிடந்தார்கள்

கொழுகொம்போ புயலில் முறிந்து சாய
பூங்கொடியோ பிஞ்சுகளோடு மண்ணில் சாய
விதி எழுதும் கதை இதுவோ?
இறைவா இது சரியோ? முறையோ?

12,10,7,4, 2, ஆறுமாத வயதான
ஆறு குழந்தைகளின் அன்னைக்கு
வயது முப்பத்தி மூன்று.
தந்தையின் வயதோ முப்பத்தி ஆறு

மறுநாள் தினகரன் நாளேட்டின் முன்பக்கத்தில்
"***நீச்சல் வீரர் நீரில் மூழ்கி மரணம்***"
கொட்டை எழுத்துக்களில் பிரசுரமான-தந்தையின்
அகால மறைவோ அவலத் தலையங்கம்

நீச்சல் வீரனின் அகால மரணத்தை செய்தியாய் படித்த-
விழிகளும் நீரில் மூழ்கிட-நீச்சல் வீரரோ
நீந்தி இக்கரை கரை கடந்து -அக்கரை சேர்ந்திட
இறைவனும் வெற்றி வீரரை வரவேற்றிட
விழிநீர் பெருகிட-தாயும் சேய்களும் விளக்கேற்றி
தந்தை படத்தை தொழுது நின்றார்

எல்லாம் இறை செயல் என்றறிந்தவர்-இதுவும்
அவர் செயல் என்றே எண்ணித் துதித்தார்-பின்
நெஞ்சு நொருங்கிட ஓவென்று-அப்பா
அப்பா என்று கதறியழுதார்.

பூவும், பொட்டும் இழந்த முகத்தில் பூத்த சோகப்
புன்னகை, பிள்ளைகளுக்கு ஆறுதலாக-கைமையிலும்
வாழ்வை சவாலாய் ஏற்ற தாய்மை
வாழ்வை வெற்றி கொண்ட தெய்வமாய் அம்மை

ஆற்றிலே புது வெள்ளம்-அன்னை விழிகளிலே
கண்ணீர் வெள்ளம், மாரி காலம் மாறிட வற்றிடும்
வெள்ளம், மறைந்தவர் நினைவு நெஞ்சில் நிலைத்திட
வாழ்விலோ வற்றாத கண்ணீர் வெள்ளம்

உன் கண்ணில் நீர் வடிந்தால் கண்ணம்மா-
என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி
என் கண்ணில் பாவையன்றோ கண்ணம்மா
என்னுயிர் நின்னதன்றோ-கண்ணதாசன்

Very very sad.😭 😭 😭 what a tragedy Mahan. Trust in God Mahan.
Your surrogate mum is here .Don't worry ❤❤❤Our prayers are always with you.
Please send a happy poem for me. 🥰 🥰 🥰 🥰 🥰

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29-09-2023*

# காவியத் தலைவி

---

சீதைக்கு நேர்ந்த துயர்-சிலகாலம், மனம் நொந்து
புலம்பிய அன்னை, ஆறாத் துயர் ஒழிய
தாலி தந்த **ராஜா ராமன்** உறவைத் துறந்து
தாயோடு இணைந்த மங்கை





வனமும், சிறையும், சீதையின் வாழ்வாக, வனமே
பின்னாளில் தாய்க்கும் சேய்களுக்கும் புகலிடமாக
அன்னையின் வாழ்விலும் சோகம் அழியாத கோலம்

காதலாகிச் **ஸ்ரீராமன்** கைத்தலம் பற்றியவள்
நெஞ்சிலும் பெருந்துயரம்-எஞ்சியதும்
எல்லாம் மாயை என்ற ஏமாற்றம்.

ஆற்றல் மிக்க ஐவரை மணந்தும், பாஞ்சாலியை
வரித்த ஆறாத் துயர்- சூதாடி தருமனுக்குப் பகடைப்
பொருளான பேதை-பகவான் காத்த மானம்
பல்லாண்டு கால வனவாசம்.

பாஞ்சாலி வாழ்வில் ஓயாத போராட்டம்
குருதியில் கூந்தலை முடித்தவள்- பிள்ளைளைப்
பிணமாய்க் கண்டு கதறினாள், அரியணை அமர்ந்தும்-
அரிவையின் நெஞ்சில் ஆறுதலில்லை, ஆனந்தமில்லை

மாலையிட்டவனைப் பிரிந்து-சோகத்தில் வாடி
மறுபடியும் கூடி மகிழ்ந்த சிலநாளில் மணாளனை இழந்து
கைமை பூண்டு, மன்னவனும் மாதரசியும் மாண்டிட-
மதுரையை எரித்த மங்கை, பெண்மைக்கும், தாய்மைக்கும்
சவாலாக இரக்கமில்லாத பெண்ணாய் கண்ணகி?

என் அன்னையின் துயரோ ஆயுட்காலம்-இளமையில்
ஐயனைக் காலன் பறித்திட, இறை தந்த
பிள்ளைகளுக்காய் அபூர்வ சுரமாய் ஒலித்தவள் வாழ்வில்
எப்போதும் சப்தஸ்வரங்களின் ஆலாபனை

வாழ்வே தவமாகி-அன்பே உருவாகி
வாழ்நாள் எல்லாம்-பெற்ற
பிள்ளைகளுக்காய் வாழ்ந்த உத்தமி
நவரசங்களை நர்த்தனமாக்கிய வித்தகி

பதினேழு வயதினில் காதல் வசப்பட்டு கல்வி துறந்து-
அறுவர்க்குத் தாயாகி, முப்பத்தி மூன்று வயதில் கொண்ட காதலும்
கனவாய்க் கலைந்திட, சூடிய மாலையும், வாடமுன் உதிர்ந்திட
மஞ்சளும், குங்குமமும் கலைந்திடக் கைமை பூண்ட பெண்மை

காலமெல்லாம் தன் குழந்தைகளுக்காய் வாழ்ந்த தாய்மை.
கண்ணகியும், சீதையும், பாஞ்சாலியும் அறியாத தியாகத்தின்
வடிவாய் அம்மை, சவாலான வாழ்வை, விளையாட்டாய்
தன்னம்பிக்கையோடு வாழ்ந்து ஜெயித்த தாய்மை



கடமையே வாழ்வு என வாழ்ந்த ஆசிரியை
தன் கனவும், நினைவும் வாழும் உலகும்
தான் பெற்ற செல்வங்கள் என வாழ்ந்த அம்மை.
தாயே தெய்வம் நான்அறிந்த உண்மை

கண்மையும் கண்ணீரில் கரைய, கலைந்த குங்குமமும்
உதிர்ந்த கார்குழல் மலர்களும், உடைத்த வளையல்களும்
வண்ணமிழந்த ஆடையும், இனி வசந்தமில்லை என்ற வாழ்வும்
சவாலாக, எதிர் நீச்சல் போட்ட வீரமங்கை, எம் அன்னை

குடும்பப் பாரமும் பாரச் சிலுவையாய் மாறிட-குன்றாத
புன்னகையோடு குருஷேத்திர பூமியில் குழலூதும் கண்ணனாய்,
கல்வாரிச் சிலுவையில் மரித்து உயிர்த்தவளாய்
எம்மைக் காக்க, தன்னைப் பலியாக்கிய தேவ அன்னை

பூவும், பொட்டும், மஞ்சளும், குங்குமமும்
புற அடையாளங்களாகத்-தான் பெற்ற செல்வங்களைப்
பொட்டும், பூவுமாய், மஞ்சள், குங்குமமாய்க் நெஞ்சில் சூடிய
எம் அன்னைக்கு நிகர் இவ்வுலகில் யாருண்டு?

நெய் வார்த்த தீயில் சீதை தீக்குளித்தது ஒரு முறை, கைமைபூண்ட
தாய்மையோ-எம்மைக் காக்க, வறுமையை எதிர்த்து, உதிரத்தை
வியர்வையாச் சிந்தி, உடலைக் கற்பூர தீபமாய் எரித்து
அக்கினியாற்றில் எதிர் நீச்சல் போட்டதோ நாளும் பன்முறை

முப்பத்தி மூன்று முதல், எண்பத்தி நான்கு வயது வரை
முள்ளிலும், கல்லிலும் நடந்து-மாமுனிபோல்
வாழ்வை தவமாய் நூற்ற எம் தாய், கற்புக்கரசிகள்
வாழ்ந்த உலகில் அன்புக்கரசியாய் வாழ்ந்த எம் அன்னை

கற்புக்கரசிகளை போற்றும் உலகு-அவர்களில்
எவரையும் நற்தாய் எனப் போற்றவில்லை

பெற்ற பிள்ளைகளுக்காய் வாழ்ந்த
உத்தமத் தாய்களாய் கற்புக்கரசிகளுமில்லை
பெண்ணின் பெருமையே தாய்மை
உத்தம தாய்மையே உயர்ந்த பெண்மை

5-1-1990- ***ராஜ்குமார்***



சின்ன மகனைச் சிறையெடுத்த அதிரடிப்படை-வதைத்துக்
கொன்றதோ? எரித்து அழித்ததோ எண்ணமே ஈட்டியாய்
நெஞ்சில் பாய ஏங்கியழுதாள், வெந்தணலில்
வீழ்ந்த புழுவாய்த் துடித்தாள், கதறினாள் என் அன்னை

பெற்ற வயிறு எரியப்-பிறவிப் பிணியும் உற்ற
கொடுந்துயரால் ஒழிய- காணமற்போன மகனை எண்ணி,
கண்ணீர் பெருகக், கடவுளைத் தொழுது-கதறிய தாய்மை,
முப்பது வயதான தம்பிக்கோ குன்றாத இளமை

17-5-2000-***உதயணன் சௌந்தரராஜா***

தாய்க்குத் தலைமகனை, கடமை வீரனை
தன்னுயிர் கொடுத்த மண்ணுயிர் காத்த மகனை
மரியன்னைபோல் மடியில் வைத்து புலம்பினாள் மாதா

தள்ளாத வயதில்-தன்னைத் தாங்குவான் என் மகன்
பொல்லாதார் கிளைமோர் குண்டுக்குப் பலியாக,-
ஈடில்லா இழப்பிற்கு இழப்பீடு இன்றிச், சோகமே வரமாக
கண்ணீரோ வாழ்நாள் சாபமாக, புலம்பிய அன்னை

அன்னையின் துயர் சொல்லவும் மொழிகள் உண்டோ?
ஆறுதல் சொல்லத்தான் வழிகளும் உண்டோ?
இரு பிள்ளைகளுக்கு தந்தையானவன் -தாயின்
மூத்த புதல்வன் வயதோ ஐம்பது

17-7-1993

அன்பே வடிவானவன், துன்பம் அறியாதவன்-பசி தாங்காதவன்-
கண்டதெல்லாம் தாயன்பு- கொண்ட செல்வமெனப் போற்றுவதோ
இறையன்பும், நூலறிவும், கற்றார் உறவும்

வஞ்சகர் காட்டிக்கொடுத்திட, பொன்னுக்காய்-இறைநேசனை
விடுதலைப் புலிகள் சிறையெடுத்திட, அஞ்சினாள்-அழுதாள்
இறைவனை வேண்டித் தவமிருந்தாள் தாய்

மண் தரையில் உறங்கி-மாதவனைச் சரணடைந்து
மாதா முகம் காணாது -மலர் முகமும், கதிர் முகம்
காணாப் பங்கயமாய் கூம்பிட, வருந்துவார் அன்னை
வாடுவார் தாய் என்றே வருந்தி நின்ற மகனோ கைதி

இறைவனை வேண்டித் தவமிருந்த அம்மை, தள்ளாத வயதிலும்
புகைபோக்கி சுடப் புண்ணான காலோடு, உந்துருளியில்
பயணித்து, பொன் கொடுத்து, பொல்லாதவர்
சிறையினின்று மகனை மீட்டெடுத்த புண்ணியவதி



***இந்திய அமைதி காக்கும் படையின் வெளியேற்றத்திற்கு***
ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தி எதிர்ப்புத் தெரிவிக்க-
வீட்டுக்கொரு இளைஞன் தருவீர் என்றே-இரவில் இளையவனை
வஞ்சகமாய் கடத்திய ஈ.பி.ஆர்.எல். எப் இயக்கம்

உண்மை வெளிச்சத்திற்கு வர, மனமுடைந்து நொந்த
தாய்மை-இருவாரம் கச்சேரி முன் உண்ணா நோன்பும்
கண்ணீர் தவமும் புரிந்து தன் செல்வத்தை மீட்ட அம்மை

அசோகவனச் சிறையிருந்த சீதையிலும்-வாழ்நாள் எல்லாம்
சோகவனச் சிறையிருந்த, அம்மை பட்ட துயரைச் சொல்ல
வார்த்தைகளில்லை, தாய்மையே தெய்வம் என்ற மேன்மை

களுவங்கேணிக் கடற்கரையில் ஓலை மட்டையில் உறங்கவைத்து
அரை வயிற்றுக் கஞ்சி கொடுத்து, ஆயுதப் பயிற்சி கொடுத்து
அஞ்சி நடுங்க வதைகள் செய்து, அரக்கராய் நடந்த-இயக்கத்தை
இளகச் செய்து-எம் தம்பியை மீட்ட தாயைப் போல் யாருளர்

ஆழ்ந்த இறை நம்பிக்கையோடும், அளப்பெரிய அன்போடும்
கற்பூரமாய்த் தன்னை எரித்து, வாழ்வைத் பிள்ளைகளுக்காய்
தவமாய் நூற்ற தாய், வாழ்வு கல்வாரிச் சிலுவையானபோதும்
சற்றும் மனங்கலங்காத வீராங்கனை

புண்ணில் விழும் அமிலத்துளிகளாய்- வாழ்வை நாளும்
சோகம் அரிக்க-செந்தணலில் விழுந்த புழுவாய் இதயம் துடிக்க
வல்லூறு பறித்த குஞ்சுகளுக்காய் வாழ்நாள்
எல்லாம் கண்ணீரோடு போராடிய தெய்வத்தாய்

தெய்வமே தாயாய் வாழ்ந்த அதிசயத்தை-பிள்ளையை
அன்றி யாருமறியவில்லை, தன்னை எரித்து
ஒளி கொடுத்த அன்னையின் வாழ்வோ கற்பூர தீபம்
தாயே தெய்வம் மாறாத கீதம்

அன்னையைப்போல் தெய்வமில்லை
அறிந்து தொழுபவருக்கு வாழ்வில் துன்பமில்லை
தாயின் காலடியில் சொர்க்கம்-அவள்
இதயமோ அன்புச் சுரங்கம்

அட்சய பாத்திரம், கற்பதரு, காமதேனு தருவதோ
பூச்சியும், புழுவும் அரிக்க, கள்வர் திருட நாடும்
அழியும் செல்வங்கள்-அன்பை அள்ளிப் பொழியும்
அன்னையோ கிடைத்தற்கரிய செல்வம்

கற்பகதருவும், காமதேனுவும், அட்சய பாத்திரமும்
அன்னையைத் தர முடியாது, ஆண்டவன்
அருளிய செல்வம் அன்னை-தெய்வமே
தாயாக வாழும் மேன்மை, உண்மை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30-08-2023*

# ராஜ்குமார்-என் தம்பி-8.1.1991

---

நெஞ்சமெங்கும் ஆறாத ரணம்
நினைவோ சோகப் புயலில் அழியும் பூவனம்
விழிகளிலோ கண்ணீர்ப் பூக்களின் சோக மணம்
இதயத்திலோ முகாரியின் ஆலாபனம்



கொஞ்சிமகிழ்ந்த சின்ன அஞ்சுகத்தை-கொடுஞ்சிங்கம்
கொன்றதுமேனோ?-நெஞ்சம் சூடிய வண்ணப்
பூமாலையை நீசர்கள் துவம்சம் செய்ததுமேனோ?



முள்ளே, -ரோஜா மலரைக் கிழித்திட-வேலியே,
இளம் தளிரை மேய்ந்திட, பூங்குயிலின் கூண்டுக்குள்
கருநாகம், பொன்மலரின் வசந்தத்தில் காட்டுத்தீ
புள்ளிக்குயிலைக் கூண்டிலடைத்து கைகுண்டுகளை
வீசிக் கொன்றார், எரியும் டயர்களில்
உடலத்தை இட்டு தடயங்களின்றி அழித்தார்.

வதை பட்ட உயிர்-சோதியாகி, வானுறையும்
தேவனுக்கு சுகந்த எரிபலியாகிட
எங்கள் அன்புறவின் திடீர் ஆரோகனம்
இதயங்களிலோ சோகத்தின் ஆலாபனம்



மகனை இழந்து அன்னை மரியாளாய்த்
தவிக்கும் தாயுள்ளம்- ஒரு புறம்
தீராச் சோகம் உறவுகளின் விழிகளில் போடும்
வற்றாத கண்ணீர் வெள்ளம்-மறுபுறம்



சுந்தரனே, என் அன்புச் சகோதரனே
வான்பூக்கும் விண்மீன்கள் வாடி வீழ்ந்தாலும்,
மண்பூக்கும் வாசமலர்கள் மணமிழந்துபோனாலும்
ஏழ் கடலும் அலையிழந்து, சுவையிழந்துபோனாலும்
என் உள்ளம் ஒருபோதும் உன்னை மறவாது

ஊனால், உதிரத்தால், உயிர்ச்சுவாசத்தால் ஒன்றாகி
ஒரு தாய் மடியில் அண்ணண் தம்பி உறவானோம்
உன்னைப் பிரிந்தபின் நெஞ்சிலே வெறுமை -மாறாத
கேள்வியாய் இறைவா ஏனிந்தக் கொடுமை?

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-12-04-2023

# லைக்கா

-------------------------------------------

என் இதயவானில்-இன்றோர் திடீர் அஸ்தமனம்
என் அமைதிப்பூங்காவில் இன்றோர் பூகம்பம்
மண்ணுக்குள் மறைந்ததோ மாறாத சிநேகத்தின் உருவம்
மனதை ஆக்கிரமித்ததோ துயரத்தின் கொடிய பருவம்



நீ சென்ற இடம் தெரியாமல் தவிக்கின்றேன்
நண்பா-உனை பின்தொடரவும்
பிரியாவிடை சொல்லவும் முடியாமல்
விழிநீர்மலர்கள் பூக்க விக்கித்து நிற்கின்றேன்

இரு கரம் விரித்து இரவு பகலாய் இறைஞ்சி நின்றேன்-
இறைவா என் உறவுக்கு உயிர் கொடு
என் அன்பிற்கு வாழ்வு கொடு என்று



என் வேண்டுதல் பலனின்றிபோக
விழிமூடி நீயும் விடை சொல்லிப்போக- உறவே
ஏன் போனாய் என்னுயிர் கொண்டு-உயிரே
எங்கு போனாய் என்னுணர்வுகளைக் கொன்று?

உன் பிரிவால் என் நினைவெங்கும் ஆறாத ரணம்
என் மனமோ தகிக்கும் பாலைவனம்
விடிவேயில்லாத இரவாய் என் பொழுதுகள்
சோக நெருப்பில் வாடும் நட்பின் நினைவுகள்

என் ஏகாந்த உலகின் இனிய உறவே-நாளாந்தம்
சுவைத்த நட்பெனும் தேவஅமுதே
உன்னோடு இருக்கும் வரை- என்னுள்ளமோ
உவகையின் குடியிருப்பு, உன்னைப் பிரிந்தபின்
என்னிதயமோ வெறுமையில் சிறையிருப்பு.

லைக்கா!என் பிரிய சிநேகிதனே
மண்ணுக்குள் உன்னுடலைப் புதைத்து
மனதுக்குள் உன் அன்பை விதைக்கின்றேன்
என் நினைவுக்குள் முளைத்து- என்றும்
என் நெஞ்சுக்குள் நீ வாழ்வதற்காய்

கங்கையோ கண்வழி பாய-கடும்புயலோ நெஞ்சுக்குள் வீச
என் அன்போ, மண்ணுக்குள், எரி நெருப்போ என் சுவாசத்தில்
மரணமே உனக்கு மரணமில்லையா?-துயரமே
தொடுவானம்போல் தூர விலகிப் போகாயோ?

வசந்தமே  நீ போனபின் என் வாழ்வெங்கும் கோடை
என் வழியெங்கும் பீடை
தீயின்மேல் என் பயணங்கள்-தந்தி அறுந்த
வீணையில் என் இதயராகங்கள்

வண்ணமிழந்த ஓவியமாய்,
வனப்பிழந்த பூவனமாய்-மனம் வாடிட
நெஞ்சிலே மாதுயர் சூடிய மாலை,
நினைவோ பசுமை இழந்த பாலை

பாசமலரோ சொர்க்கத்தில்,
பரிதவிக்கும் ஏழை நெஞ்சோ-நரகத்தில்
லைக்கா என் அன்பே-என் இதயம்
உன்னை ஒருபோதும் மறவாது

நண்பனே நாயல்ல நீ-அன்பு
மழை பொழிந்த இன்னோர் தாய்
தனிமைத் துயருக்கு-அருமருந்தான
ஆருயிர் நண்பன்

அன்பைச் சொல்ல உன்னைப்போல் உறவில்லை
உன் பிரிவைத் தாங்க என் நெஞ்சுக்கோ உரமில்லை
நீ போன பின் என் உலகே சூனியம்
உன் உறவோ அன்பின் காவியம்

தொலைவில் என் காலடி கேட்டு-வீட்டில் உன் துள்ளாட்டம்
வாயிற் கதவைச் சுற்றி உன் களியட்டம்
கதவைத் திறந்தவுடன் முன்னங்கால்களால் கட்டிப் பிடித்து
முகத்தை நக்கி அன்பைச் சொல்லும் கொண்டாட்டம்
அன்னைக்கோ அதிசயம்-
என்னிடம் சொல்லி மகிழ்ந்த ஆனந்தம்
இன்று எல்லாம் கனவாக-கனத்த நெஞ்சம் உறவாக
உன்னை எண்ணி உருகும் என் உள்ளம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-04-2023*

# சிறகொடிந்த பறவை

---



நீரின்றி வாடும் நீலத்தாமரைபோல்
நின் அன்பின்றி வாடுதம்மா
உன் பிள்ளை



கள்ளிருக்கும் மலரில் கவிதைபாடி
வளர்ந்த தேன் தும்பி -தாயே நீ போனபின்
காகிதப்பூக்களை முகர்ந்து ஏமாறுதம்மா
உள்ளிருக்கும் அன்பு நெஞ்சை அரவணைக்க யாருமின்றி
சிறகிழந்த பறவைபோல் தவிக்குதம்மா

உனைப் பிரிந்தபின் கொழுகொம்பின்றி
சோகப்புயலில் வாடும் பூங்கொடியானேன்
அன்பில்லா உலகில் அனலில் விழுந்த
சிறு புழுவானேன் அம்மா.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**(லோக சமஸ்தா சுகினா பவந்து)**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# தாய் மடி

தாய் மடி தேடி உன் சேய் தவித்த பொழுதுகளில்-தாயே
நீயோ வான் வீட்டில் இருந்தாய்-என் வீடோ கலைந்த கூடாக
நீயல்லாததும் வீடில்லை என்பது நிஜமாக, பாலும் கசந்து,
பஞ்சணையும் முள்ளாக நெஞ்சிலே காங்கை, விழியிலே கங்கை

அம்மா என்றழைக்க உறவில்லை
என் அழைப்பிற்கு பதில் கொடுக்கச்- சுவரில்
மாலையிட்ட சித்திரமாய் நீ மாறியதும்
தாயே எனக்கு புரியவில்லை?





உன் சுதந்திரப் பறவை சோகக் கூண்டில் கரைய
தாயே ஏன் என்னைப் பிரிந்தாய்?-வாழத் தெரியாத
பிள்ளையை, அன்பை தேடும் உன் மழலையை
அம்மா ஏன் கை நெகிழ்ந்தாய்?

ஆனந்தம் பொங்கிய அந்திம நாட்களில், நீயோ என் குழந்தையாக
நானோ உன் தாயாக, நீராட்டி, உடை மாற்றி ,பொட்டிட்டு பூச்சூடி
கை, கால் நகம் களைந்து அன்னத்தை நான் பிசைந்தூட்ட
உண்டு களித்து என் மகனே என அன்பொழுக அழைத்தாய்,

அருகே நான் அமர அன்பால் என் கரங்களை வருடி
ஆயிரம் கதைபேசிக் களித்தாய், இன்றோ எல்லாம் கனவாக
நீயில்லா உலகு நிலவில்லா வான் ஆனதே அம்மா
சூனியத்தில் என் மனம் தவிக்குதே



சக்கர நாற்காலியில் வைத்து வீடெல்லாம் சுற்றிக்
கதைபேசிக் களிக்க, களைப்பில் நீ கண்ணுறங்க
நான் கண கலங்க, தாய்மையை எனக்கு தந்தவளே,
தாயே நீயே என் தெய்வம் அம்மா

உன் மலசலமும் எனக்கு மணக்கும்
மலர்சரங்களாக-என் பிறப்பின்
பயனை அடைந்தேன் என்ற பெருமிதமாக
தாயே நீ எனக்குத் தந்த வரம் பெரிது.

கால் வருடி, கண்ணயர உன் அருகில் விழித்திருந்து,
நோய் வருத்தப் பாயும் “சேலைன்” முடியும் வரை
இறைவனைத் தொழுது-உனக்காய் தவமிருக்க
எனக்கு நீ ஈந்த கருணைதான் என்ன?

உன் பிள்ளையாய் என்னை ஈன்றெடுக்க, நான்
செய்யாத தவத்திற்கும்-கேட்காத வரத்திற்கும்
தாயே நீ தந்த கொடைதான் என்ன?

கண்மூடி என் மடியில் உன் ஆவி போக
கல்லறையிலும் நீ வந்து என்னைத் தேற்ற
தாயே நான் கண்ட தெய்வம் நீயம்மா
என் நெஞ்சும் என்றும் உனதம்மா.

பாற்சோறு பிசைந்து நா உருசிக்க நீ ஊட்டிய பொழுதெல்லாம்
நினைவானது, நான் விரும்புவதை நீ சமைக்க, நாம் உண்ட
விருந்தெல்லாம் கனவானது, நினைக்கையில் நாவில் நீர் ஊறுது.
நெஞ்சு விம்மிட , விழிகளில் கண்ணீர் பொங்குது



பொன், புகழ், மண் வேண்டேன்-அழகு மங்கையின்
அருங்காதலும் வேண்டேன், கவியெழுத, குறுநகையோடு
நான் மடிந்தால் நீயோ அநாதை, கண்ணீர் துடைத்து
தாய் மடி தர அன்புத் துணை வேண்டும் மகனே என்றழுதாய்

அம்மா என்றழைக்க உறவின்றி அநாதையானேன்
தெருக்களில் பித்தனாய் அலைந்தேன்
நிம்மதியின்றி, நித்திரையும் தொலைந்திட
தூக்க மருந்தின் துணை கொண்டேன் அம்மா

கலங்கிய மனம், அமைதியில் களிக்க-என் சித்தம்
அன்று உம் சித்தம் என்றே பூரண சரணாகதியில்
மனம் நிலைக்க,  என்னே என் ஆனந்தம்
உன்னால் எனக்குள் பூபாளம்-தாயே



என்றும் என் இன்பம் நீயே அம்மா-என்றும்
என்னுள் நிறைந்தவளே, நான் மறந்தபோதும்
என்னை மறவாது தன் நெஞ்சில் நிறைத்தவளே
தெய்வத் தந்த பெருங்கொடை நீ அம்மா

வாடிச் சோர்ந்த நாட்கள் கழிந்தன தாயே
வாழ்த்திப் போற்றும் நாட்கள் வந்தன
என் இதயத்தேனும் நீயே என் தாயே

வானூரும் நிலவும், தேனூறும் மலர்களும் வாழும் வரை
என் சித்தம், நினைப்பு, செய்கை உள்ளளவும்-என் உள்ளம்
ஒரு போதும் உன்னை மறவாது அம்மா

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

*Pax Ravichandra-30-08-2013*

# தாய் சேய் உறவு

---

நீரின்றி வாடும் நீலத்தாமரைபோல் நின் அன்பின்றி
வாடுதம்மா உன் பிள்ளை, கள்ளிருக்கும் மலரில்
கவிபாடி வளர்ந்த தேன்தும்பி-தாயே நீயின்றி
காகிதப்பூக்களை முகர்ந்து ஏமாறுதம்மா-

உள்ளிருக்கும் அன்பு நெஞ்சை
அரவணைக்க நீயின்றி -உள்ளம்
தாயைத் தேடும் கன்றாய்,
உன்னைத்தேடி கதறுதம்மா



உன்னைப் பிரிந்தபின்கொழுகொம்பின்றி
வாடும் பூங்கொடியானேன்-
அன்பில்லா உலகில் அனலில் விழுந்த
சிறு புழுவானேன் அம்மா

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-04-2023

# தாயே உனக்காக

---

பத்துத் திங்கள் சுமந்து பெற்று, முத்தே, முழுநிலவே, நவரெத்தினமே
எனக் கொஞ்சிக் குலாவி மகிழ்ந்து பாலூட்டிச் சீராட்டி-தான்
தூங்கிடாமல்-நான் தூங்கிடத் தோளும், மடியும் ஈந்த தெய்வம்
என்னைப் பிரிந்து மீளாத் துயில் கொண்டது

ஆடி மகிழச் சேலையில் தூளி கட்டி, அழகழகாய்த்
தாலாட்டு பாடி, தமிழ் பால் ஊட்டி வளர்த்த அன்னை
தந்தை குரு தெய்வமாய் நின்ற தாய்மை, தோழியாய்
நன்னூலாய்த் துணையாய் நின்ற பெண்மை
என்னைப் பிரிந்து வானகம் சென்றது



நிலா காட்டிச் சோறுாட்டி, நன்னூல் ஓதிக், கதை பேசி
தாயாய் நின்று, தெய்வத்தைக் காட்டி
நான் உயர ஏணியாகி, என் உலகு ஒளிரத் தீபமாகி
தன் பசி ஒறுத்து என் பசி போக்கிய தியாகி
என் தெய்வத்தாயோ கர்மயோகி

நோயுற்றபோதும், மனம் நொந்தழுதபோதும்
தாய் மடி ஈந்தே நோயும், கண்ணீரும் துடைத்தவள்
எம் வாழ்வே தன் வாழ்வு எனக் கற்பூரமாய் எரிந்தவள்
உறங்கிடப்போனாள் என்னைப் பிரிந்து



தள்ளாத வயதில் எனக்குச் சேயாய் மாறி
என்னைத் தாயாய் மாற்றி,
என் பிறவிப் பயன் தீர்த்த தெய்வம்
உறங்கும் கோயிலிது,
அன்பு மகனின் அஞ்சலி இது!



சோகம் சொல்லியழ வார்த்தைகளில்லை
என்னைப் பெற்றவளோ பூமியிலில்லை
கன்றைப் பிரிந்த பசுவாய்க் கதறும் மனம்
எல்லாப் புகழும் உனக்கே இறைவா
நன்றி கூறும் பிள்ளை மனம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-08-2023

# தாயே நீ வாழ்க

---





மூப்பும், பிணியும் வாட்டிட
முடங்கிப் படுக்கையில் கிடந்தபோதும்
பூ முகம் வாடவில்லை-தாயின்
புன்னகை மறையவில்லை

இறைநேசம் குறையவில்லை
“எல்லாம் இயேசுவே-எனக்கெல்லாம் இயேசுவே”
இறைவனை பாடித்துதிக்க நெஞ்சம் மறக்கவில்லை.

என் மேல் கொண்ட அன்பால்-இறைவன்
அழைத்தபோதும் தயங்கி நின்றாய்,
தனியனாய் என்னை விட்டுப்பிரிய
மனமின்றித் தாயே நீ கலங்கி நின்றாய்

இறைவன் மீண்டும் உன்னை அழைக்குமுன்
காக்க வைப்பது முறையல்ல என்றே, கரம் பற்றி
வானகம் சென்றாய், மகனே மீண்டும் வான் வீட்டில்
சந்திப்போம் என்றே பிரிந்து சென்றாய்

விழிநீர் மலர்களோடு விம்மி நான் தவிக்க
வானகத்திலிருந்து எம்மைக் காக்கின்றாய்
இறை தந்த கொடையே -இறையே
என் தாயே நீ வாழி அம்மா

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-08-2023

# தாயே தெய்வம்

---

பத்துத் திங்கள் பத்தியமிருந்து என்னைச் சுமந்து
பெற்றெடுத்த தெய்வம்-அமுதைப் பாலாக்கி
அருந்த தந்திட்ட அன்னையோ ஆலயம்



நாளும் தெய்வம் தொழுதிட்ட மங்கை
பிள்ளைகளுக்காய் வாழ்வை வேள்வியாக்கி



தன்னை ஆகுதியாக்கிய அம்மை

முதுமையில் கட்டிலில் முடங்கிட
கலங்கினேன்-ஏழ் கடல் அலைகள்
சோகமாய் நெஞ்சில் மோதிட-ஏங்கியே
இறைவனை வேண்டினேன்

அன்னைக்குத் தொண்டனாகி, தாய்க்குச் சேவகனாகி
பண்பட்டேன்-அன்பினால் உருமாறி
அன்பிற்கு தாள்பணிந்து, அன்னையே தெய்வம் என
உருகி உணர்ந்தேன் -உவகையடைந்தேன்.

கண்களில் கங்கை பாய, நெஞ்சில் சோக நெருப்பெரிய
அன்னையின் உடலை மண்ணில் புதைத்தே
அழியாத உறவை நெஞ்சில் விதைத்தே-இறையடி
இணைவாய் தாயே எனத் துதித்தேன்

பிறவாமை வேண்டும் தாயே
பிறப்புண்டேல், ஏழ் ஏழ் பிறப்பிலும்
உன் பிள்ளையாகும் வரம் வேண்டும்

புரியாத தவத்திற்கும், நூற்காத வேள்விக்கும்
தெய்வமே என் தாயாக வரம் பெற்றேன்
தாயே என் தெய்வம் என்ற உண்மையை
வாழ்ந்தறியும் பேறுபெற்றேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30-08.2023*

# தாயும் மகனும்

---



அந்தி வந்ததென்று பூமுகம் வாடிநிற்க
பிந்தி வந்த மூப்பும் திரையும்
பொன் மேனியில் விருந்தாய்க் குடியிருக்க
தந்தையும் தாயுமாய்
என் சிந்தையெல்லாம் நிறைந்த தெய்வம்
நோயுற்றுப் பஞ்சணையில் படுத்திருக்க
பரிதவித்தே தொட்டழுதேன்



பாசத்தோடு புன்னகைத்தவள்''என் மகனே''
என அழைத்தே என்னைத் தொட்டணைத்து
அழவேண்டாம் மகனே
ஆறுதல் சொன்ன அன்புத் தாய்

என் தனிமைக்கு துணையானவளே
என் வாழ்விற்கு பொருளானவளே
நீ போனபின் தனியனானேன்
அன்பிற்காய் தவமிருக்கும் அநாதையானேன்

தாயே நீ போனபின் என் பூவனமே காடானது
என் பொன் வானமே இருளானது.
ஏன் அம்மா என்னைப் பிரிந்தாய்?

தரையில் விழுந்த மீனாய் மனம் துடிக்க
தீயில் விழுந்த சிட்டாய் மனம் கொதிக்க
என் அன்புத் தெய்வமே -நீ போனபின்
என் வாழ்வு எரிநரகானதம்மா

தேன் மலரே- உன் பூந்தும்பி தேனின்றி வாட-உன்
புள்ளிக் குயில் சோகத்தில் கரைய
ஏன் என்னைப் பிரிந்தாய் என் தாயே
என் தெய்வமே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-7-04-2023

# தொப்புள் கொடி

---

அன்னையும் கண்மூடிட, என் ஆனந்த சொந்தமும்
விண்ணேகிட இன்றுதான் அறுந்தது
என் தொப்புள்கொடி,
என் வாழ்வோ இனி கயிறறுந்த காற்றாடி.



அம்மா என்ற ஆணிவேரும் அறுந்திட,
மகனே என்றழைத்த அன்புறவும் மௌனமாகிட,
உறவும், உலகும் வெறும் மாயையாய்ப் போனது
கண்ணீரும், சோகமும் சொந்தம் என்றானது.



என் வண்ணக்கனவும், வசந்தகாலமும்
கனவாய், பழங்கதையாய் கலைந்துபோக
கருப்பை தந்த தாய்க்கு-கண்ணீர்வடிய
கல்லறை அமைத்த பிள்ளையானேன்.

அறம், பொருள், இன்பமாய் நின்ற வீடே,
வீடு தேடி வானகம் போயிட
வீடிழந்த பிள்ளை நானும் வாடிட-காடும்,
காயாத கண்ணீரும் என் சொத்தானதே

உடைந்த மனமோ உனக்காய் கவிபாட
உன் ஆனந்த நினைவோ என்னைத் தாலாட்ட
தாய் எல்லாம் இறையன்பின் ஜனனம்.
அன்புத்தாய்களுக்கு ஏது மரணம்?

அம்மா என் ஆனந்த உறவே, இறை ஈந்த இணையில்லா வரமே ,
கத்தும் கடமேலும் காய்ந்துபோனாலும், கருவான் நிலவும்
தேய்ந்து மறைந்தாலும், என் சித்தம், நினைப்புச், செய்கை
உள்ளவரை உத்தமியே என் நெஞ்சம்-சத்தியமாய்
உன்னை ஒரு போதும் மறவாது

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-30-08-2023

# வேரும் விழுதும்

---



உன்னை நான் இழந்தபோது-தாயே
என்னை நான் இழந்தேன்
உண்மையில் நீ இறந்தபோது
உள்ளத்தில் நானே மரித்தேன்



உன் பிரிவே என் இறப்பு

உன் இருப்பே என் வாழ்வு

தாய் என்ற உறவு போனபின்
தனி மரமானேனன்-சோகப்பெருநோய்
வாட்டிடும் நோயாளியானேன்.

குயிலாய்ப் பாடிய மனமும் பண்ணோய்ந்து
மௌனம் இசைக்க, மயிலாய் ஆடிய நெஞ்சம்
காலுடைந்து முடமாய் வாடித் தவிக்க, கதறி அழுது
தாயை தேடும் கன்றாய் என் மனது

வேரும் விழுதுமாய் தாங்கி நின்ற உறவு
தோளும், மடியும் தந்த தாய்மையின் நிறைவு
சித்திரமாய்ச் சுவரிலும்,
செந்தேன் நினைவாய் மனதிலும் மாறிட
அம்மா என்று கதறும் பிள்ளை மனது
அணையாத தீபமாய் மாறிய தாய்மை உறவு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-08-2023

# யான் பெற்ற இன்பம்

---

யான் பெற்ற இன்பம், யார் பெற்றார் இவ்வுலகில்?-மூன்றரை
வயதுப் பிள்ளையின் முத்தான இளந்தந்தை மறைந்திட
ஒரே சொத்தான தாயே, ஆறு பிள்கைளுக்கும் தந்தையுமானாள்
அறம், பொருள் இன்பம் தரும் ஆனந்த இல்லமானாள்



தள்ளாத வயதில்-அன்புத் தாயே எனக்கு மகளாகிட
நானோ தந்தையும் தாயுமாகிட
யான் பெற்ற பேறு யார் பெற்றார் இவ்வுலகில்?

படுக்கையில் கிடந்தபோது, நீராட்டி, தலை சீவி அலங்கரித்து,
நித்தமும் சோறூட்டி, சீராட்டி, சுகம் வாழ மருந்தூட்டி மகிழ்ந்து,
இறைவனைப் போற்றி, அன்னை மகன் உறவைக் கொண்டாடி
நல்வாழ்வு நாம் வாழ, யாம் பெற்ற பெரும் பேறுதான் என்னே!



எல்லாம் இறை செயல் என மனம் துதிக்க
தந்தையும், தாயுமாகி நின்ற தெய்வத்திற்கு.
தனயன் யான் திருத்தொண்டானாய் பணி புரிய
தெய்வம் தந்த வரம்தான் என்னே!

தாயே தெய்வம் திருமந்திரமாக
அன்னைக்கு ஆற்றும் பணியே-திருப்பணியாக
அம்மா என்ற சொல்லே தேவாரமாக-அடியானுக்கு
ஆண்டவன் தந்த பெருவரம்தான் என்னே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-30-08-2023*

# காவியத் தலைவி என் தாய்

| | | |
|---|---|---|
| No | பொருளடக்கம் | |
| 1 | ஆனந்த உறவு | |
| 2 | அன்னையர் தினம் | |
| 3 | அன்று சிந்திய இரத்தம் -தம்பி | |
| 4 | அன்னையும் பிதவுமாகி | |
| 5 | அட்சய பாத்திரம் அம்மா | |
| 6 | அம்மா என் ஆனந்த ராகம் | |
| 7 | அம்மா என் தெய்வம் | |
| 8 | அம்மா என்னும் பேரின்பம் | |
| 9 | அம்மா ஒரு வரம் | |
| 10 | அம்மா | |
| 11 | அம்மா ஒரு ஆலமரம் | |
| 12 | அம்மா மலரும் நினவுகள் | |
| 13 | அம்மா என்னும் பேரின்ப ராஜ உறவு | |
| 14 | அம்மாவே தெய்வம் | |
| 15 | அம்மாவின் கைப்பாகம் | |
| 16 | அம்மா ஒரு ஆலயம் | |
| 17 | அன்னை | |
| 18 | அண்ணனின் பிரிவு | |
| 19 | அண்ணாவின் அகால மரணம் | |
| 20 | அன்னையும் பிதாவுமாகி | |
| 21 | அன்பே லைக்கா | |
| 22 | அப்பாவும் நானும் | |
| 23 | அத்தான் | |
| 24 | என் உலகம் | |
| 25 | இதயக்கமலம் | |
| 26 | இதயம் எழுதிய காவியம் அம்மா | |
| 27 | கலைந்த குங்குமம் | |
| 28 | காவியத் தலைவி | |
| 29 | குமார் என் தம்பி | |

| | | |
|---|---|---|
| 30 | லைக்கா என் சிநேகன் | |
| 31 | சிறகொடிந்த பறவை | |
| 32 | தாய் மடி | |
| 33 | தாய் சேய் உறவு | |
| 34 | தாயே உனக்காக | |
| 35 | தாயே நீ வாழ்க | |
| 36 | தாயே தெய்வம் | |
| 37 | தாயும் மகனும் | |
| 38 | தொப்பிள் கொடி | |
| 39 | வேரும் விழுதும் | |
| 40 | யான் பெற்ற இன்பம் | |
| | | |
| | | |
| | | |
| | | |
| | | |

